4 பக்கங்கள் 25 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 13 மதுரை 23 9–75 செவ்வாய் மலர் 197

## எண்ணெ கட்டுப்பாடாம்

வாஷிங்டன், செப். 19—
அமெரிக்கா, ஜப்பான், மற்றும் ஐரோப்பிய முதலாளித்துவ நாடுகள் உட்பட 18 முதலாளித்துவ நாடுகள் தங்களுடைய 1973-ம் வருட எண்ணெ இறக்கு மதியை விட 6 சதவீதம் குறைக்க திட்டமிட்டுள்ளன. எரிபொருள் வீணுகுவதை தடுக்கவே இந்நடவடிக்கையாம்,

## சட்ட உதவி இனும்

சண்டிகார், செப். 19—
பாதுகாப்பு துறையில் வேலை செய்யும் ராணுவ வீரர்களுக்கு இனுமாக சட்ட உதவிகள் கொடுக்கத் திட்டமிடப்பட்டுள்ளது.

ராணுவ வீரர் மீதான, ராணுவ கோர்ட்டில் தொடரப்படும் வழக்கு அவர் மீது எடுக்கப்படும் ஒழுங்கு நடவடிக்கை ஆகிய இரண்டுக்கு தவிர ராணுவ வீரரோ அல்லது அவரைச் சார்ந்திருப்பவர்களோ சமபந்தப்பட்ட வழக்குகளுக்கு சட்ட உதவி இனுமாக கொடுக்கப்படும்.

# ஆலைத் தொழிலாளர்களின் கடன் சுமைகள்

## கட்டுப்பாடுப் பற்றி பேசுகிறவர்கள் தொழிலாளர்கள் நலனைப் பேணுகிருர்களா?

புதுடில்லி, செப். 20—

**கிராமப்புற விவசாயிகளைப் போன்றே, நகர்ப்புற தொழிலாளர்களும் கடன் சுமைகளுக்கு ஆளாகித் தத்தளித்துக் கொண்டிருக்கிருர்கள்.**

**நகர்ப்புற தொழிலாளர்கள் எந்த அளவுக்கு கடன் பட்டிருக்கிருர்கள் என்பது குறித்து, பல்வேறு ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன.**

ஆலைத் தொழிலாளர்களுக்கு கொடுக்கப்பட்டு வரும் உண்மையான சம்பளத்தின் அளவு ஆண்டு தோறும் சுருங்கி வருவதாகவும், ஆலை அதிபர்கள் அடித்துவரும் உண்மையான லாபத்தின் அளவு ஆண்டுதோறும் அதிகரித்து வருவதாகவும் புள்ளி விபரங்களோடு சர்வே செய்யப்பட்டிருக்கின்றன, இது ஒரு புறமிருக்க, தொழிலாளர்படும் இன்னல்களையும் சர்வே செய்திருக்கிருர்கள்.

### உற்பத்தி சக்தி உறங்குது

மற்றும் முதலாளிமார்கள் — குறிப்பாக, இரும்பு, உருக்கு தொழிற்சாலைகளின் முதலாளிகள், அவர்களது ஆலையின் உற்பத்தி சக்தியில் 40 சதமான சக்தியை பயன்படுத்தாமல் போட்டிருக்கிருர்கள் என்றும்—உர ஆலையில் 35 சதமான உற்பத்தி சக்தி—வீணுகக் கிடக்கிறது என்றும், சிமெண்ட்ஆலையில் 23 சதமானம் உறங்கிக் கிடப்பதாகவும், காகித ஆலைகள் 29சதமானமும், இயந்திரக் கருவி உற்பத்தி ஆலைகளில் 30 சதமானமும் 23சதமானம் அலுமினியத் தொழிலிலும் விவசாயக் கருவிகளை உற்பத்தி செய்யும் தொழில்களில் 50 சதமான உற்பத்தி சக்தியும் பயன்படுத்தப்படாமல் உறங்கப் போட்டிருப்பதாக 1973—74ம் ஆண்டுக்கு எடுக்கப்பட்ட சர்வேயில் கூறப்படுவதாக 'எக்கானுமிக் டைம்ஸ்' பத்திரிகை கூறியுள்ளது.

### ஆலை அதிபரின் குற்றத்துக்கு தொழிலாளிகளுக்கா தண்டனை?

ஆலை அதிபர்கள் தங்களது ஆலைகளின் உற்பத்தி சக்தி முழுவதையும் பயன்படுத்த கையாலாகாது போனதினுல் —அவர்களின் அந்தக் குற்றத்துக்கு,ஆலைத் தொழிலாளர்கள் தண்டிக்கப்படும் கொடுமை நடக்கிறது.

ஆலையின் முழுசக்தியையும் பயன்படுத்தாததினுல், லே-ஆப் விடப்படுகிறது; ஆட் குறைப்பு செய்யப்படுகிறது. ஆலைகளும் மூடப்படுகின்றன.

இவையனைத்தும் தொழிலாளர்களின் வேலை நாட்களை வெட்டுவது மட்டுமின்றி,அவர்களின் ஊதியத்தையும் வெட்டி விடுகிறது.

### குறியீட்டெண் குள்மால்

ஆலைத் தொழிலாளர் படும் துயரம் இவை மாத்திரமா? வாழ்க்கைச் செலவு குறியீட்டெண் தயாரிக்கின்ற மத்திய அரசு அதிகாரிகள், சந்தைக்கடையில் விற்கப்படும் விலைகளை வைத்துக் கணக்கிடாமல்மொத்த விலைகளை வைத்து எப்படியெப்படியோ கூட்டல் கழித்தல் வேலைகளில் ஈடுபடுகிருர்கள். இதனுல், மொத்த விலை இறங்கி விட்டதாகச் சொல்லி —சில்லறை விலை இறங்காமல் இருக்கும் போதே—வாழ்க்கைப்புள்ளியைக் குறைத்துக் காட்டி, பஞ்சப்படியை வெட்டுவதற்கு வழிவகுத்து விடுகிருர்கள்.

### கடன் சுமைகள்

ஆலைத் தொழிலாளர்களின் சுமைகளைப் பற்றி, ஓர் ஒருங்கிணைந்த சர்வே நடத்தப்படா விட்டாலும், ஆங்காங்கே தனித்தனியாக எடுக்கப்பட்ட சர்வேக்கள் பல உண்மைகளை வெளிப்படுத்தியுள்ளன.

நிலக்கரிசுரங்கத்தொழிலாளர்களில் சரிபாதிப் பேரும், தோட்டத் தொழிலாளர்களில் சரிபாதிப் பேரும் பெருங் கடனுளிகளாக இருப்பது தெரியவந்துள்ளது.

இரும்பாலைத்தொழிலாளர்களில் 24சதமானம்பேர் கடனுளிகள் என்று லேபர் பீரோ சர்வே கூறுகிறது.

ஆமதாபாத் பஞ்சாலை தொழிலாளர் சங்கம் நடத்திய சர்வேயில், நூற்றுக்கு 91தொழிலாளிகள் கடனுளிகள் என்று தெரியவந்துள்ளது.

### கடன் ஜாலிக்காக அல்ல

ஆலைத் தொழிலாளர்கள் கடன் வாங்குகிருர்கள் என்ருல் ஏதோ ஜாலியாக செலவழிப்பதற்காக அல்ல, அகாத வட்டிக்கு கடன் வாங்குவது ஆடிப்பாடி களிப்பதற்காக அல்ல.

பெரும்பாலான தொழிலாளிகள் தங்களது வருமானத்தைக்கொண்டு வாழ்க்கை நடத்த முடியாமற் போனதுதான், கடனுக்கு காரணமாகும்.

இந்தக் காலத்தில்தொழிலாளர்கள் படும் இன்னல்களுக்கு அளவே இல்லை.விதவிதமான துயர்கள் இவர்களை முற்றுகையிடுகின்றன. லே-ஆப் மட்டுமல்ல, ஆள் குறைப்புமட்டுமல்ல் ஊதிய வெட்டு மட்டுமல்ல,

வேலைசெய்யும்போதுவிபத்துகளும் ஏற்படுகின்றன; செய்கின்ற வேலைகளினுல் பல்வேறு சிக்குகளும் ஏற்படுகின்றன.

போஷாக்குக் குறைவினுல், தொழிலாளர்களும் அவர்களது குடும்பத்தினரும் எண்ணற்ற நோய்களுக்கு ஆளாகிருர்கள்.

வீட்டு வசதிகளும் சரிவர இல்லாததினுலும்,வீடுகளைச் சுற்றிலும் அசுத்தங்களும் குப்பை கூளங்களும் நிறைந்து கிடப்பதினுலும் பல்வேறு நோய்கள்உண்டாகின்றன.

### வேலையும் இல்லை

துன்பமும் துயரமும் இவை மாத்திரமா? தொழிலாளர் குடும்பங்களில், வயது வந்த ஆட்களுக்கு வேலையும் கிடைப்பதில்லை. அதனுல் வாலிபப் பருவம் அடைந்துள்ள பிள்ளைகளையும், தானே பாதுகாக்க வேண்டியுள்ளது.

நாட்டிலுள்ள செல்வங்கள் அனைத்திலும்மேலானது உழைப்புச் செல்வம்தான். உழைப்புதான் சகல செல்வங்களுக்கும் ஆதார சக்தியாகும்.

அப்படியிருந்தும்தேசிய அபிவிருத்தியில் தொழிலாளர்களுக்கு மதிப்பு அளிக்கப்படுவதில்லை. வெறுமனே கட்டுப்பாடு, கட்டுப்பாடு என்று வாய்ப்பறை கொட்டிக் கொண்டுதான் இருக்கிருர்களே தவிர உற்பத்தியில் ஈடுபடும் உழைப்பாளி வர்க்கத்தின் நலன்களைப் பேணுவாரில்லை'' — என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆங்கில ஏடான ''பீப்பிள்ஸ் டெமாக்ரஸி'' யின் கட்டுரை கூறுகிறது.

## கிடைக்கிற உதவிகளை பெறுவதில் வெட்கமில்லை

### இந்திராகாந்தி பேச்சு

புதுடெல்லி, செப். 19—
சிலநாடுகள் மற்ற நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடும்போக்கை கடைபிடித்து வருவதாக பிரதமர் இந்திரா காந்தி கூறினுர்.

சமீபத்தில் அமெரிக்க ஜனுதிபதி போர்டு இந்திய நாட்டின் சுதந்திர உரிமைகள் பற்றிகுறிப்பிட்டுக்கூருமல் மேற்கண்டவாறு கூறினுர். மேலும் அவர் தனது பேச்சின்போது, இந்தியாவானது, மேற்கத்திய நாடுகளின் (அமெரிக்கா, பிரிட்டன்,பிரான்சு, மே.ஜெர்மனி போன்ற முதலாளித்துவ நாடுகளின்) எதிர்ப்பு நாடுமல்ல; சோவியத் யூனியன் ஆதரவு நாடுமல்ல. உதவி கிடைக்கிற நாடுகளிலிருந்தெல்லாம் உதவி பெறுகிருேம். இதில் எவ்விதவெட்கமும் இல்லையென்றே நான் நினைக்கிறேன். ஏனெனில் உதவிபெறுகிருேம் என்பதற்காக, அந்நாடுகளிடம் நாம் நமது கொள்கைகளையும், சித்தாந்தங்களையும்எதனையும் நாமவிட்டுக்கொடுக்கவில்லை என்றும் கூறினுர்.

அகில இந்திய மதச்சார்பின்மை, சோசலிசம், ஜனநாயகத்திற்கான கல்வியாளர்களின் மாநாடு என்ற பெயரில் டெல்லியில் நடைபெற்ற மாநாட்டில் பேசிய போது மேற்கண்டவாறு பேசினுர். அதன் சுருக்கம் வருமாறு:

இராணுவ ரீதியாகவும், பொருளாதார அரசியல் நிர்பந்தங்களின் மூலமாகவும், அடுத்த நாடுகளின் உள் விவகாரங்களில் தலையிட உரிமையுண்டு என்று அடுத்த நாடுகளின் உள்விகாரங்களில் தலையிடுபவர்களால் அறிவிக்கப்பட்டுள்ளது என்றும்பிரதமர் பேசினுர்.

மேலும் அவர்கள் இந்தியாவைப் பற்றி •தீர்மானிப்பதில் இரட்டை நிலை எடுக்கிருர்கள் என்றும் இந்தியாவில் நடப்பதைப்பற்றி கண்ணீர் வடிப்பவர்கள், எதேச்சாதிகார ஆட்சிகள் நடக்கும் நாடுகளை ஆதரிக்கிருர்கள் என்றும் பிரதமர் கூறினுர்.

மேலும் அவர் பேசுகையில், இந்தியாவில் சில கோஷ்டியினர் அன்னிய நாடுகளிலிருந்து பலமான

(5ம் பத்தி பார்க்க)

## வேலூர் வட்டத்தில்

(வ. ஆ. மாவட்டம்)

**ஜனநாயக பாதுகாப்பு பொதுக்கூட்டங்கள்**

23—9—75 மாலையில்

**விருப்பாச்சி புரத்தில்**

ஏ. லோகநாதன் தலைமையில்
நாடாளுமன்ற உறுப்பினர்
உலகநம்பி (தி மு க)
தியாகி வி. முனுசாமி
(ஸ்தாபன காங்கிரஸ்)
மதுரை நன்மாறன்,
கே. ஆர். சுந்தரம்
வே. கண்ணன்
(மார்க்சிஸ்ட்)
பேசுவர்.

**மொணவூர்**

பஜனைக் கோவில் தெருவில்
24—9—75 மாலையில்
தோழர்
எஸ். முனிரத்தினம்
தலைமையில்
மதுரை நன்மாறன்
கே. ஆர். சுந்தரம்
வே. கண்ணன்
பேசுவர்

## அழிக்கோடன் ராகவன் நினைவு நாள்

கேரளப் பாட்டாளிவர்க்க இயக்கத்தின்
இடதுசாரி ஜனநாயக இயக்கத்தின்
அமைப்பாளன்—
தொழிலாளர் தலைவன்—
'சகாவ்'கிருஷ்ணபிள்ளை அவர்களின்
வழித் தோன்றல்—
சிறந்த மார்க்சிஸ்ட்—லெனினிஸ்ட்
தோழர் **அழிக்கோடன் ராகவன்**
1972-ஆம் ஆண்டு இதே நாளில்
(செப். 23-ல்) திருச்சூரில்
ஆளும் வர்க்கங்களின்
கைக் கூலிகளால் குரூரமாகக்
கொலை செய்யப்பட்டார்.

**வாழ்க அவர்தம் நாமம்!**

## கூட்டுக் கமிசன் கூட்டம் நடைபெறும் என்கிருர் சவாண்

புதுடெல்லி, செப். 19—
அமெரிக்க ஜனுதிபதி இந்தியாவைப் பற்றி குறிப்பிட்டது குறித்து மனஸ்தாபம் இருந்த போதிலும் இந்திய-அமெரிக்ககூட்டுக்கமிஷனின் கூட்டம் நடைபெறும் என்று இந்திய வெளிநாட்டமைச்சர் சவான் அறிக்கையொன்றின் மூலம் தெரிவித்தார்.

இந்தியாவில் சுதந்திர உரிமைகள் பாதிக்கப்பட்டுள்ளது என்று அமெரிக்க ஜனுதிபதி போர்டு கூறியதும் அதனை ஆட்சேபித்து இந்திய வெளிநாட்டமைச்சகம் கண்டித்ததும் தெரிந்ததே.

நியூயார்க் நகரில் நடைபெறும் ஐ நா சபைக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்குப் புறப்படும் முன்பு சவான் வெளியிட்ட அறிக்கையில் மேலும் தற்போதுள்ள திட்டப்படி அக்டோபர் 6, 7-ந் தேதிகளில் நடைபெறவிருக்கும் இந்திய—அமெரிக்க கூட்டுக் கமிஷன் கூட்டத்தில் கலந்து கொள்ள வாஷிங்டன் செல்வேன் என்று குறிப்பிட்டுள்ளார்.

இந்திய-அமெரிக்கஅரசியல் பொருளாதார உறவுகளையும் கல்வி, கலாச்சார தொழில்நுட்ப உறவுகளையும் வளர்த்துக்கொள்வதற்காகவும் ஆரம்பிக்கப்பட்டது இந்திய அமெரிக்க கூட்டுக் கமிஷன்.

கிசிங்கர் இந்தியாவந்த போது ஆரம்பிக்கப்பட்ட இக்கமிஷன், அதன் பிறகு இந்த ஆண்டு ஏப்ரலில் கூடுவதாக இருந்தது. ஆனுல் அண்டை நாடான பாகிஸ்தானுக்கு அமெரிக்க ஆயுத சப்ளையை மீண்டும் தொடங்கியதையொட்டி இரண்டு நாடுகளுக்கிடையே ஊடல் ஏற்பட்டது அவ்வூடலை தொடர்ந்து ஏப்ரலில் நடைபெறவிருந்த கூட்டுக் கமிசன் கூட்டம் நடைபெறவில்லை.

எனினும் இருநாடுகளுக்குமிடையேயான கல்வி, கலாச்சார, விஞ்ஞான உறவுகளை வளர்ப்பதன் பொருட்டு ஏற்படுத்தப்பட்ட துணைக் கமிசன்கள் இடைக்காலங்களில் கூடி வந்தன. அதன் தொடர்ச்சியாக கூட்டுக் கமிசன் அக்டோபர் 6, 7 வாஷிங்டனில் கூடுகிறது.

இக்கூட்டுக் கமிசனுக்கு அமெரிக்க வெளிநாட்டு காரியதரிசி கிசிங்கரும், இந்திய வெளிநாட்டமைச்சர் சவானும் கூட்டுச் சேர்மன்களாவர்.

[இது பற்றிய தலையங்கம் காணவும்]

(2-ம் பத்தி தொடர்ச்சி)

உதவி பெறுகின்றனர். விரிவாக இல்லாத சில தலைமறைவு சக்திகளுக்கு சில ஸ்தாபனங்கள் வழிகாட்டுகின்றன; உதவவும் முயற்சிக்கின்றன. ஆனுல் அவை வெற்றிபெறவில்லை என்ருர்.

மேலும் வெளிநாடுகளிலிருந்து உதவி பெறுகின்றவர்களுக்கு எதிராகவோ அல்லது உதவிபெற்றஸ்தாபனங்களுக்கெதிராகவோகுற்றச்சாட்டுகளை நிரூபிக்கும் நிலையில் நாம் இல்லாவிடினும், அவைகள் நடந்து கொண்டிருக்கின்றன என்பதை நாம் அறிவோம் என்ருர் பிரதமர்.

மேலும் அவர் தனது பேச்சில் அன்னிய பத்திரிக்கைகளின் இந்திய எதிர்ப்பு நிலை, இந்தியாவில் ஜனநாயகம் என்பது பற்றியெல்லாம் தமது 40 நிமிட உரையில் பேசினுர்.

## அமெரிக்காவின் நிபந்தனைக்கு ஜோர்டான் எதிர்ப்பு

அமான், செப். 19—
அமெரிக்காவிடமிருந்து ஜோர்டான் நாடானது விமானஎதிர்ப்பு ராக்கெட்டுகளை வாங்காது என்றும் ஏனெனில் வாங்கும் ராக்கெட்டுகளை உபயோகிப்பது பற்றி அமெரிக்க ஜனுதிபதி போர்டு கட்டுப்பாடு விதிக்கிருர் என்றும் ஜோர்டான் அரசாங்கம் அறிவித்துள்ளது.

அமெரிக்கத் தூதுவரைச்சந்தித்து ஜோர்டான் பிரதமர் மேற்கண்ட விபரத்தை தெரிவித்துள்ளார்.

மேலும், அமெரிக்க மகா சபையில் அமெரிக்க ஜனுதிபதி வெளியிட்டுள்ள கட்டுப்பாடுகள், நிபந்தனைகள் அடிப்படையில் அமெரிக்காவிடம் விமான எதிர்ப்பு ராக்கெட்டுகள் வாங்க ஜோர்டான் மறுத்துவிடும் என்றும் மேலும் அவ்வாறு கட்டுப்பாடுகள் விதிப்பது, ஜோர்டான் தேசியத்தின் பெருமையை அவமதிப்பது மாகும் என்றும் அந்நாட்டு பிரதமர் குறிப்பிட்டுள்ளார்.

ஏற்கனவே, ஜோர்டான் மன்னர், அமெரிக்காவிடம் விமான எதிர்ப்பு ராக்கெட்டுகள் வாங்குவதற்கான முயற்சி தோல்வியடையுமானுல் சோவியத் யூனியனிடமிருந்து விமான எதிர்ப்பு ராக்கெட்டுகளை வாங்கப்போவதாக அறிவித்துள்ளார்.

## 5 ஆயிரம் புலவர்களின் வேலை வாய்ப்புக்கு ஆபத்து

### முதலமைச்சர், கல்வியமைச்சரை சந்திக்க முடிவு

மதுரை, செப். 20—
'மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் புலவர் பட்டம் பெற்ற 5000 புலவர்களது பிரச்னை சம்பந்தமாக மாநில முதலமைச்சரையும் கல்வி அமைச்சரையும் 8 பேர் கொண்ட தூதுக்குழு ஒன்று சந்திக்கவிருக்கின்றது.

இக்குழுவில் திருவாளர்கள் காசிநாதத்துரை, டி பி எம் பெரியசாமி, எம் தனுக்கோடி பாண்டியன், ஆ. செயரத்தினம்,மூர்த்தி, சீவகன், 'மதுரைத் தமிழ்ச் சங்கப்புலவர்கள் இணைய'த்தின் செயலாளர் கமருசமான், தங்கவேலு ஆகியோர் உள்ளனர். தமிழ்ச் சங்கத்தின் புலவர் பட்டம் பெற்றவர்களது பிரச்னை குறித்து விவாதிப்பதற்காக கடந்த 14-ந் தேதியன்று மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் நடந்த கூட்டத்தில் மேற்கண்டமுடிவுஎடுக்கப்பட்டது.

இக்கூட்டத்தில்தமிழ்ச்சங்கத்தின் செயலாளர் டி. பி. எம். பெரியசாமி, துணைத் தலைவர் காசிநாதத்துரை தலைமை வகித்தனர்.

மாநிலம் முழுவதிலுமிருந்து தனிப்பயிற்சிக் கல்லூரி நிர்வாகிகளும் தமிழ்ப் புலவர்களும் கலந்துகொண்டனர்,

அண்மையில்அரசுபிறப்பித்துள்ள ஓர் உத்திரவின் விளைவாக மதுரை தமிழ்ச் சங்கத்தில் புலவர் பட்டம் பெற்றுள்ள 5 ஆயிரத்துக்கு மேற்பட்டவர்கள் 1-4-76 க்குப் பிறகுவேலைவாய்ப்பை இழப்பதையும், இவ்வாண்டு நவம்பரிலிருந்து ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளுக்கு விண்ணப்பிக்க முடியாத நிலையையும் வேதனையையும் விளக்கினர்.

## பிலிபைன்சிலும் கட்டாய வேலை நீக்கம்

மணிலா, செப். 19—
பிலிப்பைன்ஸ் ராணுவ சர்வாதிகாரியான மார்கோஸ், தனது ஆட்சியில் 2000-க்கும் அதிகமான உயர் அதிகாரிகளை முதல் கட்டமாக பதவியிலிருந்து விலக்கியுள்ளார்.

அவர்களில் 14 பேர் நீதிபதிகளாவர். நீதித்துறையிலிருந்து இன்னும் நூற்றுக்கணக்கானேர்பதவி நீக்கம் செய்யப்படுவார்கள் என்றும் அறிவித்தார். மேலும் பாதுகாப்பு பரிவர்த்தனை கமிஷனர், ஆடிட் கமிஷனர்ஆகிய உயர்உதவி அதிகாரிகளும் பதவியிலிருந்து நீக்கப்பட்டனர். ஆடிட் கமிஷனரின் மகன்கள் மூவர் ஆடிட் கமிஷனில்தான் வேலைபார்த்தனர். அவர்களும், அவர்களோடு நூற்றுக்கணக்கான அதிகாரிகளும், ஊழியர்களும் பதவி விலக்கம் செய்யப்பட்டனர்.

மேலும் மார்கோஸ் தனது மந்திரி சபையில் இருந்த வயது அதிகமான 65 வயதைக் கடந்த 3 அமைச்சர்களுக்கும் கட்டாய ஓய்வு கொடுத்துள்ளார்.

விலக்கப்பட்ட 2000-க்கும் மேற்பட்ட அரசாங்க அதிகாரிகளில் மார்கோஸின் நெருங்கிய நண்பர்களும் உள்ளனராம்.

## அன்னிய தோட்டங்கள் அரசுடைமை

கொழும்பு செப்.19—
அன்னிய நாட்டு கம்பெனிகளுக்கும், உள்நாட்டு கம்பெனிகளுக்கும் சொந்தமான தோட்டங்களை அரசுடை[illegible]ாக்கப் போவதாக இலங்[illegible]ாய அமைச்சர் அ[illegible]ாார்.

அதற்கான [illegible]சோதா இலங்கை நாடா[illegible]ன்றத்தில் நிறைவேற[illegible]ட்டு சட்டமாக்கப்படும் [illegible]றும் அவர் அறிவித்தார்.

அரசுடைமையாக்கப்படும் அத்தோட்டங்களின் கம்பெனிகளுக்கு நஷ்டஈடும் கொடுக்கப்படுமாம். அதற்கான விதியும் அச்சட்டத்தில் சேர்க்கப்படுமாம்.

# தீக்கதிர்

## ஊடலும் கூடலும் ஒரே சமயத்திலா?

அடுத்து வரும் அக்டோபர் மாதத்தில் 6,7 தேதிகளில் அமெரிக்கத் தலைநகரான வாஷிங்டன மாநகரத்தில் இந்திய — அமெரிக்க கூட்டுக் கமிஷன் கூட்டம் நடைபெறவிருக்கிறது. அடுத்த வாரம் நடைபெறவிருக்கும் ஐ நா சபைக் கூட்டத்துக்குச் செல்லும் இந்திய வெளி விவகார மந்திரி ஒய் பி சவாண், ஐ நா சபைக் கூட்டத்தில் கலந்து கொண்டுவிட்டு—அப்படியே வாஷிங்டன் சென்று கூட்டுக்கமிஷன் கூட்டத்திலும் கலந்துகொள்ளப் போவதாக அறிவித்துள்ளார்.

இந்த ஆண்டு ஆரம்பத்தில் அமெரிக்க வெளிநாட்டு காரியதரிசி கிசிங்கர் இந்தியாவுக்கு வந்து, இந்திய மந்திரிகளையும், அதிகாரிகளையும் முதலாளிகளையும் சந்தித்து தொழில், வர்த்தகம் கலாச்சாரம், கல்வி, தொழில் நுட்பம் போன்ற அநேக ஒப்பந்தங்களைச் செய்து— அவற்றையெல்லாம் நடைமுறைக்குக் கொண்டுவர இந்திய—அமெரிக்க கூட்டுக் கமிஷனையும் துணைகமிஷன்களையும் ஏற்படுத்தி விட்டுப்போனபிறகு— கூட்டுக்கமிஷன் கூடாமல் 7,8 மாதங்கள் ஓடிவிட்டன.

இந்த அசையா நிலைக்கு காரணம், மீண்டும் பாகிஸ்தானுக்கு அமெரிக்கா ஆயுத சப்ளை செய்யமுன் வந்ததேயாகும்.

இதனால் ஏற்பட்ட கசப்புணர்ச்சியின் விளைவாக கூட்டுக்கமிஷனைக் கூட்டுவதில் நாட்டமில்லாமலே போயிற்று,

ஆனால் அந்நிய உதவி இல்லாமல் எதையும் செய்ய இயலாது என்ற சார்பு நிலையைஏற்படுத்திக் கொண்டு விட்டதால் இந்த ஊடலும் ஆறுமாத அளவுக்கே தாக்குப் பிடிக்க முடிந்தது.

மீண்டும் கூடலைத் துவக்க, அமெரிக்காவிலுள்ள இந்திய தூதர் கவுல் எவ்வளவோ, புகழுரைகளை அமெரிக்கத் தலைவர்களுக்கு வழங்கினர்.

மூலதனம் போடுவதற்கு காலநிலை பக்குவமாக இருப்பதாக, மத்திய நிதியமைச்சர் திரு சி. சுப்ரமணியம் அமெரிக்காவுக்கு பறநது போய், அமெரிக்கத் தலைவர்களிடமும் செனட்டர்களிடமும் கூடிவிட்டு, நம்பிக்கையுடன் வந்தார்.

நிதி மந்திரி திருப்பி வந்து ஒரு மாதம் ஆவதற்குள் மற்றுமொரு ஊடல் ஆரம்பிது விட்டது. இந்தியாவில் ஜனநாயகம பறிக்கப்படடு விட்டதாக அமெரிக்கஜனாதிபதி போர்டு பேசியது மட்டுமல்லாமல, இந்த ஆண்டில இந்தியாவுக்கு வருவதற்கு நேரமில்லைஎன்றும கூறிவிட்டார்.

போர்டின் இந்தப் போக்கை, "நட்பு நாட்டின் உள்விவகாரங்களில் தலையிடும் போக்காகும்" என்று கூறி இந்திய சர்க்கார் ஆட்சேபித்திருக்கிறது.

போர்டு இந்தியாவுக்கு வரமறுத்தது பற்றி பிரதமர் இந்திரா பேசுகையில் "நாங்கள் மேற்கு நாடுகளுக்கு எதிரானவர்களுமல்ல—சோவியத் நாட்டுக்கு ஆதரவாளர்களும் அல்ல. எங்கிருந்தெல்லாம் உதவிகள் கிடைக்கிறதோ, அவைகளை நாங்கள் பெற்றுக் கொள்ளுகிறோம். இந்த உதவிகளைப் பெறுவதில், நமது லட்சியங்களையோ, கொள்கைகளையோ, வேறு எதையுமோ விட்டுக் கொடுக்காதவரையில், நாம் வெட்கப்படுவதற்கு ஒன்றுமில்லை" என்று கூறியுள்ளார்.

ஆனால் ஒன்று மேற்குநாடுகளின் கடனுதவிகளில் குறிப்பாக அமெரிக்காவின் கடனுதவிகளில்—இந்தியாவின் சுதந்திரத்துக்கு குழிபறிக்கிற நிபந்தனைகளும் உள்ளன என்பதை நாம் அறிவோம்.

பிறநாடுகளின் விவகாரங்களில் ராணுவ ரீதியாகவும் பொருளாதார, அரசியல் நிர்ப்பந்தங்கள் மூலமாகவும் தலையிட தங்களுக்கு உரிமை உண்டு என்று அமெரிக்க ஜனாதிபதி போர்டே பகிரங்கமாகப் பேசியதையும் யாரும் மறந்திருக்க முடியாது.

அப்படிப்பட்ட அமெரிக்காவுடன் கூட்டு ஒப்பந்தங்கள் செய்திருப்பதுடன்,அனைத்து வாசல்களையும் அமெரிக்க முதலாளிகளுக்குத் திறந்து விடுவது பற்றிப் பேச. வெளி விவகார மந்திரி சவாணும செல்லவிருக்கிறார்,

ஜனாதிபதி போர்டு கூறிய வார்த்தைகளால் இந்தியாவில் கொதிப்பு ஏற்பட்டிருந்த போதிலும் கூட, அதையும் பொருட்படுத்தாமலதான் கூட்டுக்கமிஷன் கூட்டத்துக்குப் போகிறேன் என்று சவாண் கூறுகிறார்.

இந்தக் கூட்டுக் கமிஷனின் நோக்கமென்ன?மேலும் மேலும் அமெரிக்காவிடமிருந்து கடன்களை வாங்கி, இந்தியாவின் கழுத்தை இறுக்குவதுதான்)

ஏகாதிபத்திய நாட்டிடம் கடன்பட்ட நாடு எதுதான் தன்மானத்துடன் வாழ்கிறது? சோழியன் குடுமி சும்மா ஆடாதுஎனபதை அமெரிக்காவிடம் கையேந்தியஒவ்வொரு நாடும் படும்பாட்டிலிருந்தே தெரிந்து கொள்ளலாம்.

அமெரிக்காவுடன் வரைமுறையின்றி உறவு கொள்வதின் விளைவாக சி ஐ ஏ யின ஆயிரமாயிரம் விஷ நகங்களும் இந்தியாவில் மேலும் ஆழமாகப் பதிவதற்கு அமெரிக்காவுக்கு உரமான வாய்ப்புகளை அளிப்பதாகும அல்லவா!

அமெரிக்க ஏகாதிபத்திவாதிகளை எதிர்த்து [illegible] தலைவர்கள் எந்த அளவு வீ[illegible] பேசியிருக்கிறார்கள் என்பது முக்கியமல்ல.

எந்த அளவு நடைமுறையில் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளுக்கு வாசலைத்திறந்து விடுகிறார்கள் என்பது தான முக்கியம்.

ஏனென்றால், தீர்மானிப்பது செயல்களேயொழிய, பேச்சுகள் அல்ல.

---

# மாணவர்கள் கோஷமிட்டதற்காக

## பிரின்ஸ்பாலையும், ஆசிரியர்களையும் மிரட்டுகிறார்

# ஆந்திர மாநில கல்வி அமைச்சர்

காகினடா, செப். 19— அடக்கி ஒடுக்கி வைக்கப்பட்டிருக்கும் மாணவர்களின் அதிருப்தியும், ஆத்திரமும் அவர்களையும் மீறி கிளம்பி விட்டதை அனுபவிக்க நேர்ந்த ஆந்திர மாநில கல்வி அமைச்சர் சம்பந்தப்பட்ட கல்லூரி பிரின்சிபாலையும், ஆசிரியர்களையும் மிரட்டியதோடு அல்லாமல் பல மாணவர்களை சஸ்பென்ட் செய்துவிட்டும் போய்விட்டார்.

இங்கரில் உள்ள பி ஆர் அரசாங்க கல்லூரியில் ஹால் ஒன்றை திறந்து வைக்க வந்தார் ஆந்திர கல்வி அமைச்சர் எம் வி கிருஷ்ணாராவ். அவர் கல்லூரிக்குள் நுழைந்த போது மாணவர்கள் "கோவிந்தா, கோவிந்தா"என்று கோஷம் போட்டுவிட்டனர். அமைச்சருக்குஆத்திரம் எக்கச்சக்கமாக வந்து விட்டது.

### மன்னிப்பு கேட்க அமைச்சர் உத்திரவு

ஆயிரக்கணக்கானரூபாய் செலவழித்து படித்தாலும் வேலை கிடைக்காத, விலை போகாத படிப்பை மாணவர்கள்படிக்கிறார்கள்.கல்லூரிக்குள்படிப்பதற்கும் சமுதாயத்தில் சந்திக்கும் பிரச்சினைகளுக்கும் சம்பந்தமில்லாத கல்வியை கற்கிறார்கள் மாணவர்கள். இம்மாதிரியான அடிப்படைக்கோளாறான கல்வியைப் படிக்கச் செய்தால் அதிருப்தி ஏற்படத்தானே செய்யும்? இதனை புரிந்துகொள்ளாத அந்த அமைச்சர், "கோவிந்தா கோவிந்தா" என்று சத்தம் போட்ட மாணவர்களில் ஒருவர் அவர்களின் சார்பாக வந்து மன்னிப்புக் கேட்டால்தான் கல்லூரி ஹாலை திறந்து வைப்பேன் என்று கூறி விட்டார்.

எந்த ஒரு மாணவரும் முன்வரவில்லை. நிகழ்ச்சிக்கான நேரம் கடந்து சென்றது ஒரு மாணவர் அமைச்சர் முன் வந்தார். தான் "கோவிந்தா கோவிந்தா" என்று கூச்சல் போட்டவன் அல்லவென்றாலும் கூச்சல் போட்டவர்கள் சார்பாக தான் மன்னிப்புகேட்பதாகக் கூறினர்.

காந்தீயம் பேசுகின்ற காங்கிரசுக்காரர்களில் ஒருவரான அவருக்கு அது போதுமானதாக இல்லை. சத்தம் போட்ட மாணவர்களில் ஒருவர் வந்துதான் மன்னிப்புக் கேட்கவேண்டும் என்று பிடிவாதமாக இருந்தார். கூச்சல் போட்ட மாணவர் ஒருவர் யாராவது மன்னிப்பு கேட்க வந்தால் அவரிடம் மிரட்டி பயமுறுத்தி கூச்சல் போட்டவர்கள் யார் யார் என அறிந்து அவர்களை சஸ்பெண்ட் செய்து பழி வாங்கி விடலாம் என்று அவர் நினைத்தாலும் நினைத்திருக்ககூடுமல்லவா?

### அதிகாரத்தின் ஆணவம்

ஆத்திரம் அடங்காத அமைச்சர்கோஷம்போட்ட மாணவர்கள் யார்யாரென அறிந்துவர வேண்டுமென கல்லூரி பிரின்சிபாலுக்கும் ஏனைய ஆசிரியர்களுக்கும் உத்திரவிட்டார். அவர்களும் கல்லூரிக் கட்டிடத்தைச் சுற்றி வந்தார்கள். ஏதோ ஒரு பட்டியலையும் கொண்டு வந்தார்கள். அந்தப்பட்டியலில உள்ளவர்களையெல்லாம் சஸ்பெண்ட் செய்து கல்வி அமைச்சரே உத்திரவிட்டார்.

அத்தோடு அவர் விட்டுவிடவில்லை. ஆசிரியர்களும் மாணவர்களும் தனித்தனியே ஒரு உறுதிமொழி கொடுக்குமாறு உத்திரவிடடார். அமைச்சரின் உத்திரவின்படி தான் ஒரு உபயோகமுள்ள பிரஜையாக வர அனைத்து முயற்சிகளும் செய்வதாக ஆசிரியர்கள், மாணவர்களில் ஒவ்வொருவரும் கூறினர்கள். அதன் பினபே கல்லூரிஹாலைதிறந்துவைக்கும் நிகழ்ச்சியை நடத்தினராம்.

அத்தோடு அவர்விட்டுவிடவில்லை. இன்னும் ஒரு மாதத்தில் அககல்லூரி மாணவர்களை கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவராவிட்டால் அக்கல்லூரி பிரின்சிபலையும்ஆசிரியர்களையும் வேறு இடங்களுக்கு மாற்றிவிடப்போவதாகவும் மிரட்டிவிட்டு சென்றுள்ளார்.

அதிகாரத்தைக் காட்டி, கல்லூரி முதல்வரையும், ஆசிரியர்களையும் மிரட்டுவதும், மாணவர்களை சஸ்பெண்ட்செய்வதும் அமைச்சர் விரும்புகிற கட்டுப்பாட்டை பயமுறுத்திக் கொண்டு வருவதுதானேயொழிய வேறல்ல.

---

ஏழுமலையான்

## லட்டு சாப்பிட்டு பலியானோர் எட்டாக உயர்வு

விழுப்புரம், செப். 20— திருப்பதி ஏழுமலையானின் "பிரசாத"மான லட்டு சாப்பிட்டு இறந்தவர்களது எண்ணிக்கை 8-ஆக உயர்ந்துள்ளது. தென் ஆற்காடு மாவட்டம் விழுப்புரததை அடுத்துள்ள திருவெண்ணைநல்லூரைச் சேர்ந்த திருமதி லெட்சுமி அம்மாளுக்கு திருப்பதிலட்டு பார்சலில் வந்ததும், அதை உண்ட 7 பேர் மாண்டதும் 38 பேர் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டதும் தெரிந்ததே.

மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டோரில் முருகானந்தம் (வயது2) என்ற சிறுவனும் ஒருவன். அவன் சிகிச்சை முடிந்து வீடு திரும்பினான். 18-ந்தேதி மீண்டும் வாந்தியும் பேதியும் ஏற்பட்டு பரிதாபமாக இறந்து போனான்.

---

## ஜனநாயக பாதுகாப்பு பொதுக்கூட்டம்

கோவை, செப். 20— மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சித்தாபுதூர் 1,2-வது கிளைகள் சார்பில் வி கே கே மேனன் ரோட்டில் கடந்த 14-ந்தேதியன்று ஜனநாயகப் பாதுகாப்புப் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் என் சின்னச்சாமி தலைமை வகித்தார்,

கோவை —நீலகிரி மாவட்ட சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி செயலாளர் கே சி கருணாகரன், தமிழக ஜனநாயக மாதர் சங்கச் செயலாளர் பாப்பா உமாநாத் ஆகியோர் இன்றைய அவசர நிலையின் தன்மைகளை விளக்கியும், மக்களது கடமைகளை உணர்த்தியும் பேசினர்.

அவசரநிலைப் பிரகடனத்தை வாபஸ் பெறக் கோரியும், கைது செய்யப்பட்டு காவலில் உள்ள அரசியல் தலைவர்களையும் ஊழியர்களையும் விடுதலை செய்யக் கோரியும் மத்திய அரசுக்கு வேண்டுகோள் விடுக்கப்பட்டது.

தமிழகத்தில் ஊர்வலங்கள் நடத்துவதற்கு விதிக்கப்பட்டுள்ள தடை உத்திரவை ரத்துச் செய்யும்படி மாநில அரசுக்கு ஒரு வேண்டுகோள் விடுக்கப்பட்டது.

---

## நிர்வாகிகள் தேர்வு

வடஆற்காடு,செப்.20— அனைத்துக் கட்சியினரும் அங்கம்வகிக்கும் வடாற்காடு மாவட்ட சீட்டுக் கம்பெனி ஊழியர்கள் சங்க நிர்வாகிகள் தேர்தல் கடந்த 1ந்தேதி திரு டி எஸ் லெட்சுமணன் தலைமையில் நடந்தது.

தலைவராக க பத்மநாபன், உதவித் தலைவராக பி ஏகானந்தன், செயலாளராக மு மணி, உதவிச் செயலாளராக எம் கே அன்பு, பொருளாளராக எஸ் ராஜு ஆகியோரும், செயற்குழு உறுப்பினர்களாக டி எஸ் லெட்சுமணன், சி ஆதி கேசவன் ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## மின் தொழிலாளர் சங்கம் முகவரி மாற்றம்

தமிழ்நாடு மின் திட்ட தொழிலாளர்(குமரி,நெல்லை, முகவை,மதுரைமின்திட்டங்கள்) சங்கத்தின் தலைமைச் சங்க அலுவலகம் இதுவரை 6ஏ, பராசக்தி கட்டிடம், மதுரை ரோடு, திருநெல்வேலி—1ல் இயங்கி வந்தது. கடந்த 15-9-75 முதல் கீழ் வரும் முகவரியிலிருந்து செயல்படுகிறது.

சி ஐ டி யூ கட்டிடம்,
சிவந்திப்பட்டி ரோடு,
மகாராஜ நகர்,
திருநெல்வேலி-11.

## ஈரோடில் கட்சி — தீக்கதிர் நிதியளிப்பு விழா

இன்று (23-9-75)
மாலை 7 மணிக்கு
புதுச்சந்தை மைதானத்தில்
தோழர் கே. பி. சின்னப்பன்
தலைமையில்
தோழர்கள்
**வி. கே. கோதண்டராமன்**
**ஆர். வெங்கிடு**
சி. எஸ். பொன்னுச்சாமி
கே. துரைராஜ்
ஏ. சாமியப்பன
பேசுவர்.

---

# நம்பினால் நம்பு! நம்பா விட்டால் போ!

அவசர காலம் விரைவில் முற்றுப்பெறும். அரசியல் தலைவர்கள் விடுதலை செய்யப்படுவார்கள். பறிபோன பத்திரிகைச் சுதந்திரம் பறந்து திரும்பி வந்துவிடும். சகல கட்சிகளும் எப்பொழுதும்போல்இயங்கும்... குடு,...குடு,...குடு,... குடு ...

குடுகுடுப்பைக் காரனுகிகுறி சொல்ல நாம் முற்படவில்லை. திருமதி காந்தியிடம் இந்நிலை எப்பொழுது முடிவுக்கு வரும் என்று கேட்போரிடமெல்லாம், "இப்பொழுது சொல்ல முடியாது" என்றுதான்சொல்லி வருகிறார். "எதிர்க்கட்சிகள் ஒழுங்காக நடந்து கொள்ளுவதைப் பொருத்தது" என்கிறார். "எப்படி இருந்தாலும் ஜூன் 26-ந் தேதிக்கு முன்பிருந்த காலம் திரும்பி வராது" என்கிறார்...... இப்படி எல்லாம் அம்மையாரே அடிக்கடி கூறிவரும் சமயத்தில் நீர் என்னய்யா குடுகுடுப்பை அடிக்கிறீர் என்று கேள்வி எழுவது நியாயம்.

### ஆதாரம் ஆரூடர் அல்ல

பதில் சொல்ல வேண்டியது நமது பொறுப்புதான். ஆதாரம் இல்லாமல் நாம் இப்படி எழுதவில்லை. என்ன ஆதாரம் என்று ஆத்திரத்துடன் கேட்கிறீர்கள் அல்லவா? திருமதி காந்தியின் வீட்டின் நடுக் கூடத்தில் வீற்றிருக்கும் ஆரூடரைக் கேட்டு நாம் எழுதவில்லை. அவர் பக்கத்திலே போய் நின்று அப்பெரியவரை தரிசித்து, அன்னரிடம் கேள்வி கேட்டு விளக்கம் பெறும் நிலையில் நாம்இல்லை. எனவே அந்த ஆரூடர் அல்ல நமக்கு ஆதாரம்.

நமக்கு ஆதாரம் நமது நிதிமந்திரி சுப்ரமண்யம் அவர்கள்தான். "போயும் போயும் அவரையும் அவரது பேச்சையும் ஆதாரம்காட்டுகிறீரே! உமக்கு வேறு பொளப்பு கிளப்புஇல்லையா? அவர் "பச்சை கண்ட பக்கமெல்லாம் மேஞ்சு, தண்ணி கண்ட பக்கமெல்லாம் குடிச்சு" வாயிலெ வருகிற வார்த்தைகளையெல்லாம் வாரியிறைக்கிறவராச்சே? அவரைப்போய் ஆதாரம் காட்டுகிறீரே" என்று எரிந்து விழவேண்டாம்.

நமது சுப்ரமண்யம் பேச்சுக்களைப்பற்றி இப்படிக் கருதுபவர்கள் அதிகம்இருந்தாலும் எழுதக் கூடிய நாம் அப்படிப்பட்டவர்கள் அல்ல. விஷயம் இல்லாமல் எழுதக் கூடியவர்கள் அல்ல.

திருவாளர் சி. சுப்ரமண்யம போய்ச்சேரவேண்டிய இடத்துக்குப் போய் சந்திக்க வேண்டிய பெரியவர்களையெல்லாம் சந்தித்து, தரவேண்டிய உறுதிமொழிகளை தந்திருக்கிறார். பொள்ளாச்சியில் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் அவர் வாயைப் பொளந்திருந்தால் நாம கவலை காட்டியிருக்க மாட்டோம். சென்னையிலே நிருபர்களிடம் நாக்கை நீட்டியிருந்தால் நாம் நம்ப மாட்டோம். டில்லியிலே டெலிவிஷனிலே "நேரில்விஜயம்" செய்து நேரில் கக்கியிருந்தாலும் கவலைப்பட மாட்டோம்.

### சந்தித்த பேர்வழிகள் யார் யார்?

ஆனல், அவர் போயிருந்த இடம் அப்படிப்பட்ட இடமல்ல.அது அமெரிக்கத் திரு நாட்டின் தலைநகரம், வாஷிங்டன். உலக பாங்க், சர்வதேச நிதிநிறுவனம் ஆகியவற்றின் வருடாந்தரக் கூட்டத்துக்கு இந்தியாவின் பிரதிநிதிகளது கோஷ்டியின் தலைவராக அங்குசென்றார். அது சமயம் அங்கு அவர் ஒரு வாரம் தங்கியிருந்தார். அப்பொழுது, அமெரிக்க அயல்நாட்டு உறவுகளுக்கான மேல் சபையின் (செனட்) கமிட்டியையும் அதன் தலைவரான செனடர் ஸ்பார்க்மென்என்பவரையும் சந்தித்தார்.முன்பு ஜனாதிபதி பதவிக்கு தேர்தலில் வேட்பாளராக இருந்த மெக்கவர்ன் என்பவரையும் சந்தித்தார். அதுவும் தவிர உட்ரோ வில்சன் நிறுவனத்தின் தலைமைக் குழுவையும் சந்தித்தார் (உட்ரோ வில்சன் என்பவர், 1914—18ல் முதல் மகாயுத்தம் நடந்த காலத்தில் இருந்த ஒரு பிரசித்தி பெற்ற அமெரிக்க ஜனாதிபதி. அவர் பெயரால் விளங்கும் நிறுவனம்). இவர்கள் அனைவரும் பெரிய இடத்து பேர்வழிகள் என்று விளக்கத் தேவையில்லை.

### கொடுத்த உறுதிகள்

இவர்களிடம் என்ன பேசினர்? செப்டம்பர்மாதம் 7ந்தேதி (மதுரைபதிப்பு) 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' ஏட்டில் விசேஷ நிருபர் டி வி பரசுராம எழுதியுள்ள குறிப்பில் அவர் கூறுகிறார்:

இவர்களிடம் சுப்ரமண்யம் கீழ்க்கண்ட **உறுதிகளை** அளித்தார்.

1. இந்தியாவில் அவசர காலநிலை என்பது தற்காலிக மானதே.

2. பிரதம மந்திரி, ஜனநாயகத்தின் மீதும், பலகட்சி அமைப்பின் மீதும் தேர்தல்கள் மீதும் நீதித் துறையின் செயல்பாடு மீதும் தனக்குள்ள பற்றுறுதியை திட்டவட்டமாக திரும்பத்திரும்ப உறுதிபடுத்தியுள்ளார் — இவை அனைத்தும் ஜனநாயகத்தின் அடிப்படையான அம்சங்கள். பத்திரிகைத் தணிக்கையும் தற்காலிகமானதே.

### பணப் பெட்டியினரும் எதிர்பார்த்துப் போனவரும்

இவை பற்றி கேட்டவர்களோ, பணப்பெட்டிகளின் சாவிகளை வைத்திருக்கும் பெத்தப்பேர்வழிகள். போனவரோ அப்பெட்டிகளின் பூட்டுக்களின் வாய்களில் இந்தச் சாவிகள் போடப்பட வேண்டுமே, பெட்டிகள் திறக்கப்படவேண்டுமே, அந்தக் கத்தை நோட்டுகளில் பலநூறுகோடி நமக்கு வழக்கத்தைவிட அதிகமாக-கடன் வேண்டுமே என்று ஏக்கத்துடன் போன நிதி மந்திரி, இந்த நிலையில் அழாகுறையாக, அசட்டுச்சிரிப்புடன் உறுதிமொழிகளைத்தந்துள்ளார். இதைவிடவேறு என்ன ஆதாரம் வேண்டும் திருமதி இந்திரா போட்ட கோட்டைத் தாண்டாத 'பத்தினி' மந்திரி.திருமதிஇந்திரா சொல்லாமலா இத்தனை உறுதிமொழிகளை அள்ளி வீசியிருக்கிறார்?அப்படி நடந்திருக்கவே முடியாது. எனவேதான் கூறுகிறோம்! ஆதாரத்தோடு கூறுகிறோம்! "விரைவில் அவசர காலம் போகும்.விரைவில் ஜனநாயகம் மீளும்! விரைவில் பத்திரிகைச் சுதந்திரங்கள் மறுபிறப்பு எடுக்கும்!...என்று.

### தற்காலிகம் என்பது எதைக் குறிக்கிறது ?

ஆனல்!... ஆனல்!...... ஒரு சின்னப்பொடி இருக்கிறது! சுப்ரமண்யத்தின் உறுதி மொழிகளில் ஒரு பொடி இருக்கிறது.

"அவசர கால நிலை **தற்காலிகமானதே**" "பத்திரிகைத் தணிக்கையும் **தற்காலிகமானதே**" என்ற வாக்கியங்களை கவனித்தீர்களா? கொட்டை எழுத்துக்களில் உள்ள சொற்களைகவனித்தீர்களா? **தற்காலிகமானதே**

இந்த தற்காலிகமானது என்ற சொல் நாட்களைக் குறிக்கின்றதா, மாதங்களைக் குறிக்கின்றதா, அல்லது வருடங்களைக் குறிக்கின்றதா? அங்குதான் பொடி இருக்கின்றது.

அதற்கு விடை வேண்டும் என்றால், திருமதி காந்தியின் மாளிகையின் நடுக்கூடத்தில் வீற்றிருக்கும்ஆரூடரைத்தான் கேட்க வேண்டும்!

---

### 2 மாதமாக வேலைதர மறுப்பு:

# வேலைகோரி உண்ணாவிரதமிருந்த சுருட்டுத் தொழிலாளர் கைது

திண்டுக்கல். செப். 20— வேலை கோரி அமைதியாக உண்ணாவிரதம் இருந்த சுருட்டுத் தொழில்ாளர்களை நிர்வாகத்தின் தூண்டுதலின் பேரில், போலீசார் கைது செய்து சிறையில் அடைத்தனர். விபரம் வருமாறு:

இங்குள்ள பகவதி விலாஸ் சுருட்டுக் கம்பெனி நிர்வாகம், கடந்த 2மாதகாலமாக தொழிலாளர்களுக்கு பிடிவாதமாக வேலை கொடுக்காமல் 150 தொழிலாளர்களையும் அவர்தம் குடும்பங்களையும் பட்டினிபோட்டு வருகிறது.

இந்த அக்கிரமத்தை எதிர்த்தும் வேலைகோரியும் தொழிலாளர்கள் ஒன்றுபட்டுப் போராடி வருகிறார்கள்.

"அவசரநிலை"ப் பிரகடனத்தால் வேறுவகையிலான கிளர்ச்சிகளில் இறங்க முடியாதவாறு தடுக்கப்படடுள்ள இத்தொழிலாளர்கள் அனைவரும் அமைதியாக கடந்த 3-ந் தேதி முதல் இருவர் வீதம் தொடர் உண்ணாவிரதம்மேற்கொண்டார்கள். இதையும் கூட பொறுக்க முடியாத நிர்வாகம் போலீசின் உதவியை நாடியது. போலீசார் உண்ணாவிரமிருந்த 15பேரை கைது செய்து மதுரை மத்திய சிறையில் அடைத்தது. இவர்களில் தோ. சந்தனம் என்ற 70 வயது நிரம்பிய தோழர் ஒருவரும் உண்டு.

அந்த 15 பேரும் கடந்த 12, 13 தேதிகளில் ரொக்க ஜாமீன் மூலம் ஜாமீனில் விடுதலை ஆகினர்.

விடுதலை ஆன தோழர்களை சி ஐ டி யூ தலைவர் வி எஸ் எம் மரைககாயர், நகர மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் ஏ. முனுசாமி ஆகிய தோழர்கள் மலர்மாலை அணிவித்து வாழ்த்தி பாராட்டினர்.

தோழர் தோ சந்தனம் நன்றிதெரிவித்துப் பேசினர்.

### மயில்மார்க் சுருட்டு

இதே போல் மயில் மார்க் சுருட்டுக் கம்பெனி நிர்வாகமும் தொழிலாளர்களுக்கு வேலை தரமறுத்து வந்தது. ஆனல் கடந்த 10ந் தேதிமுதல் வேலைகொடுத்து தொழிலாளர்கள் வேலை செய்து வருகிறார்கள்.

### சி ஐ டி யூ வற்புறுத்தல்

கடந்த 2மாதமாகமூடிக் கிடக்கும்பகவதிவிலாஸ் சுருட்டுக் கம்பெனியை திறந்து 150 தொழிலாளர்களுக்கும் வேலை தரக் கோரியும்,வேலை கோரி உண்ணாவிரதமிருந்த 15 தொழிலாளர்கள் மீது போடப்பட்டுள்ள வழக்குகளை வாபஸ் பெறக்கோரியும் மாநில அரசுக்கும் அதிகாரிகளுக்கும் நகர சி ஐ டி யூ வேண்டுகோள் விடுத்துள்ளது.

---

### ஆசிரியருக்கு

## சாலை-குடிநீர், தபால் வசதி எப்போது கிடைக்கும்?

ஐயா,

இராமேஸ்வரம் டவுனிலிருந்து 3 மைல் தூரத்தில் உள்ளது ஏறகாடு கிராமம. இங்கு ரோடு வசதிகள் கிடையாது. மேலும் மாட்டு வண்டியைத் தவிர மற்ற வாகனங்கள் வர இயலாது, ஒற்றையடிப் பாதையாகவும் முட்களும் புதர்களுமாய் இருப்பதே காரணம்.மேலும் பிரசவ வேதனைபடும் பெண்களையோ, இதர ஆபத்து நிலைமைகளில் உள்ளவர்களையோ அவசரமாக மருத்துவ மனைக்கு கொண்டு செல்ல முடியாது அவதிப்படுகிறோம்.

மேலும், காட்டுப்பிள்ளையார்கோவில், ஏறகாடு கிராமம், அரியாக்குண்டுமுதலியவற்றின் இணைப்புப் பாதையாகவும் ஏறகாடு கிராமம் உள்ளது. அதாவது இராமேஸ்வரம்—ஏறகாடு சாலை சீர்திருத்தப்பட்டால் மேற்கூறிய 4 கிராமங்களிலுள்ள மக்களுக்கும் வசதியாய் இருக்கும. மூவாயிரத்துக்கும மேறபட்ட மக்கள் வசிககும் இப்பகுதியில் அரசு இதுவரை கவனம் செலுத்தவில்லை. குறிப்பாக ஏறகாடு கிராமத்திற்கு எவ்வித வசதியும் செய்து தரப்படவில்லை; தபால் போக்குவரத்தும் சிரமமாயுள்ளது. உடனடியாக தபால்கள் கிடைப்பதில்லை.

ரேசன் கடையில் வழங்கப்படும் பொருட்களின் அளவும் குறைந்து வருகிறது. சரியான விநியோகமும் கிடையாது.

மேலும், இராமேஸ்வரம் நகரியத்தால் வெட்டப்பட்ட கிணறு தண்ணீரில்லாது காய்ந்து வறண்டு போயுள்ளது. பஞ்சாயத்தால் வெட்டப்பட்ட குளமும் அவ்வாறே. இப்பகுதியிலுள்ள ஏழை, உழைப்பாளி மக்களது குறைகளைத் தீர்க்கக் கோரி கலெக்டரிடம் மகஜர் கொடுத்தும், தபாலில்அனுப்பியும் நடவடிக்கை இல்லை.

அதிகாரிகளும், அரசும் தக்க நடவடிக்கை விரைந்து எடுக்க முன்வருமாறு கிராம மக்கள் சார்பாக கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு
எஸ். தியாகராஜன்
சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி
இராமேஸ்வரம்

---

# சில "டபுள் ஆக்ட்" நிபுணர்கள்!

ஏ. பாலசுப்ரமண்யம்

இரானின் மன்னாதி மன்னன் (ஷா-இன்-ஷா என்ற சொல்லுக்கு நேரான பொருள்) தனது நாட்டின் நாடாளுமன்றத்தில் உரை நிகழ்த்தினார். இந்த ஆண்டில் மட்டும் எண்ணெ, வாயு ஆகியவற்றை ஏற்றுமதி செய்ததன் மூலம் இரானுக்கு 2197 கோடி டாலர் (17ஆயிரத்து 576கோடி ரூபாய்) வருமானம் என்று அறிவித்தார்.

## ராணுவ ரீதியாக தலையிட நேருமாம்

உலகத்தில் பணவீக்க நிலை நீடித்துக் கொண்டிருக்கும் சூழலில் எண்ணெ விலைகளை உயர்த்துவது என்பது "முழுமையாக தர்க்கரீதியாக நியாயமானதே" என்றும் உரைத்தார். 'பீரங்கி ராஜதந்திர மிரட்டல்கள்' மூலம், எண்ணெ விலைகளை உயர்த்த, எண்ணெ உற்பத்தி செய்யும் நாடுகள் செய்துள்ள முடிவை பலவீனப்படுத்த இயலாது என்று இடித்துரைத்தார். (சென்ற நூற்றாண்டிலும் இந்த நூற்றாண்டின் துவக்கத்திலும் மேற்கத்திய ஏகாதிபத்திய நாடுகள் பின் தங்கிய ஆசிய, ஆப்ரிக்க நாடுகளது கடற்கரையோரங்களில் தங்களது பீரங்கிகள் தாங்கிய கப்பல்களைக் கொண்டு வந்து நிறுத்தி, அந்த பீரங்கிகளைக் காட்டிமிரட்டி, இந்த அப்பாவி நாடுகளில் புகுந்து கொள்ளையடிக்க முடிந்தது. அதைத்தான் ('Gun Boat Diplomacy') என்று சொல்வது!

இவ்வாறு இந்த மன்னாதி மன்னன் பேசியது- இவ்வருட ஆரம்பத்தில் அமெரிக்க முக்கியஸ்தர்களில் சிலர் எண்ணெ வள நாடுகளில் ராணுவ ரீதியாகத்தலையிட நேரிடும் என்ற மிரட்டல் பேச்சுக்களை மனதில் கொண்டுதான் பேசினார் என்று "இந்து" நாளேட்டின் 9—9—75-ந் தேதிய இதழ் கூறுகிறது. அப்படி மிரட்டிய அமெரிக்க பிரமுகர்கள் வேறுயாருமில்லை —அமெரிக்க அயல் நாட்டு மந்திரியான கிசிங்கரும், பாதுகாப்பு மந்திரியான ஸ்லெசிங்கரும் (இந்த இரண்டு அசிங்கர்களும்!) தான்.

## அமெரிக்காவின் ஆயுதக் கிடங்கு

பார்த்தீர்களா, இந்த மன்னாதி மன்னனது அமெரிக்க எதிர்ப்பை—ஏகாதிபத்திய எதிர்ப்பை? அவரது இந்த உரையில் ஏகாதிபத்திய—எதிர்ப்பு உள்ளதா இல்லையா? நிச்சயமாக உளளது. இதனை எவரும் மறுக்கமுடியாது. எனவே அந்த நாட்டில் டாங்கே கட்சி போன்ற ஒரு வலது கம்யூனிஸ்டுகட்சி இருந்தால் அதுஎன்ன செய்யவேண்டும்? இந்த மன்னாதி மன்னனது கரங்களை பலப்படுத்த வேலை செய்ய வேண்டும். அவரை மாஸ்கோவுக்கு அழைத்துச்சென்றுலெனின்டதக்கத்துக்கு சிபாரிசு செய்வார்கள். அங்குள்ளவர்களும் அதனை அவருக்கு அணிவித்துமகிழ்ந்தாலும் மகிழ்வார்கள்!

அந்த நாட்டில் கம்யூனிஸ்ட் கட்சி என்று ஒன்று இருக்கக் கூடாது என்பது மன்னனது ஏற்பாடு, ஜனநாயக வாடை கூடாது. மத்திய கிழக்கிலேயே இரான்தான் ஆகப்பெரிய அமெரிக்க ஆயுதக் கிடங்கு. இரானுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே உள்ள எல்லையில், பாகிஸ்தானுக்கு அடுத்து இந்த வட்டாரத்திலேயே மிகமிகப்பெரியராணுவதளத்தை அமெரிக்கா நிறுவி வைத்துள்ளது — மன்னாதிமன்னனது அனுமதியுடன்! மூன்றுவது உலகம் என்று அழைக்கப்படுகிறதே, அதில் இந்த "டபுள் ஆக்ட்" மன்னன் ஒரு ரகம்!

2) அடுத்து இன்னும் ஒரு பெரியவரைப் பார்ப்போம். அவரது பெயர் பர்டினண்டு மார்க்கோஸ் என்பதாகும். அவர் பிலிப்பைன்ஸ் நாட்டின் ஜனாதிபதி. பிலிப்பைன்ஸ் நாட்டின் தலைநகரானமணிலாவில் செப்டம்பர்11-ந் தேதி — ஒரு வாரத்துக்கு முன் — அவர் பேசினார். (இப்பேச்சு 'இந்து" பேப்பரின் 12—9—75-ந் தேதிய, இதழில் வந்துள்ளது)—"பிலிப்பைன்ஸ் தேசமானது, அமெரிக்காவின் மீது ராணுவ ரீதியில் உள்ள சகல சார்புத் தன்மைகளையும்—வடிவங்களையும்—முடிந்த மட்டும், முடிவுக்குக் கொண்டுவரவே விரும்புகிறது."

## இரட்டை வேடம் கண்டு ஏமாறக் கூடாது

மணிலா நகரத்தின் புறநகர்ப்பகுதியில் உள்ள ஒரு ராணுவ முகாமில், ராணுவ அதிகாரிகளிடம உரையாற்றுகையில், "இந்தக் காரணத்தினால்தான், பிலிப்பைன்ஸ் அரசு, ராணுவத்தளங்கள் உள்ளிட்டு அமெரிக்காவுடன் செய்யப்பட்டுள்ள ராணுவ ஒப்பந்தங்கள் அனைத்தையும் குறித்து மீண்டும் பேச்சு வார்த்தைகளை நடத்திக் கொண்டிருக்கிறது" என்றார். ஆயுதப் படைகளின் "விசுவாச தின"க்கூட்டத்தில்தான் இவ்வாறு அவர் பேசினார்.

பாதுகாப்பு விஷயங்களில் சொந்தக் காலில் நிற்கவேண்டியதன் அவசியத்தை கோடிட்டுக் காட்டி, தனது நாட்டின் தெற்கத்திய தீவுகளில் நிலவிய முஸ்லீம் கலகத்தை தனது ராணுவ ஆட்சி, எந்த அந்நிய உதவியுமின்றி எப்படி சமாளித்துள்ளது என்பதையும் சுட்டிக்காட்டினார்.

மார்க்கோஸ் அவர்களது பேச்சில், அமெரிக்க ராணுவ தளங்களை அப்புறப்படுத்த வேண்டும் என்ற அவரது ஆர்வத்தில், ஏகாதிபத்திய எதிர்ப்பு இருக்கிறதா இல்லையா? நிச்சயமாக இருக்கிறது. இதனை வெறும் வாய்ச்சவடால் என்று தள்ளிவிடாமல், அந்நாட்டு மக்கள் மத்தியில் அமெரிக்க ஏகாதிபத்திய எதிர்ப்பை வளர்க்க இதனைப் பயன்படுத்தவேண்டும். அந்நாட்டில் டாங்கே கட்சிபோல் ஒன்று இருந்தால், அது என்ன செய்யும்? "மார்க்கோஸின் கரங்களை பலப்படுத்துக" என்று கூறும்!

மார்க்கோஸ் நடத்துவது ஒரு ராணுவ சர்வாதிகாரத்தின் ராணுவஆட்சி. நூறு ஆண்டுகளுக்கு மேலாக அமெரிக்க அடிவருடிகளாக இருந்த பிற்போக்கு வர்க்கங்களின் ஆட்சி. ஜனநாயக வாடையே இல்லாத ஆட்சி. மார்க்கோஸ் என்பவரும் கடுமையான கம்யூனிஸ்ட் எதிர்ப்பாளன். இவரது அமெரிக்க எதிர்ப்பெல்லாம், சோசலிச உலகத்தின் மகத்தானவளர்ச்சி என்ற பின்னணியில், அண்மையில் வியட்நாம மக்களும், கம்போடிய மக்களும் அமெரிக்க ஏகாதிபத்தியத்தை செருப்பால் அடித்து விரட்டியபின் ஏற்பட்ட புதிய குணம. இருந்தாலும், ஏகாதிபத்திய எதிர்ப்புத் தன்மைதானே? முற்போக்கு சக்திகள் பயன்படுத்த வேண்டிய நிலை தானே?

ஆனல் அதற்காக, அங்குள்ளபுரட்சி சக்திகள் அந்த அரசுக்கு எதிரான தங்களது கடமைகளை மூட்டை கட்டி வைத்து விடமுடியுமா? அவ்வாறு செய்யலாமா? எக்காரணத்தைக் கொண்டும் இவரது "டபுள் ஆக்டை"க் கண்டு ஏமாறக்கூடாது!

## துரோக ஒப்பந்தம்

3) அடுத்த "டபுள் ஆக்ட்" பெரியவரைப் பார்ப்போம். அவர்தான் எகிப்தின் ஜனாதிபதி அன்வர் சதாத இவர் ஒருகாலத்தில்—நாசர்மறைவுக்குப்பின்னரும்,இஸ்ரேலுடன் கடைசியாக நடந்தயுத்தம்வரையிலும்—கோசிஜின்,பிரெஷ்னேவ் ஆகியோர்களது நெருங்கிய "பாய் பாய்". கெய்ரோவிலிருந்து கிரெம்ளினுக்குப் போய்வர ரிட்டர்ன்டிக்கெட் வைத்திருந்தவர். எகிப்திய ராணுவத்தின் சகல ஆயுதங்களும் தளவாடங்களும் சோவியத் யூனியன் தந்தவை. சோவியத்தின் உதவியின்றி இவரோ, இவருக்குமுந்தி இருந்த கமால் நாசரோ தலைநிமிர்ந்து, சுதந்திர புருடர்களாக நின்றிருக்க முடியாது. வளர்ந்து கொண்டேயுள்ள வலுவான சோஷலிச உலகம் என்பதே, இதுபோன்ற புதிதாக விடுதலைபெற்ற நாடுகளது சுதந்திர அந்தஸ்துக்கான முதுகுத்தண்டு. சூயஸ்கால்வாயை நாட்டுடைமையாக்கிய சமயம், எகிப்தின் மீது ஆக்ரமிப்பு யுத்தம் நடத்திய பிரிட்டனையும் பிரான்சையும் மிரட்டிப் பின்வாங்கச் செய்து, எகிப்தைப் பாதுகாத்தது உலக சோஷலிசம். அஸ்வான் அணையை கட்டிக் கொடுத்து, எகிப்தின் அகத்தையும் முகத்தையும் மாற்றிக் கொடுத்துள்ளது சோவியத்தின் உதவி!

ஆனல் இன்று, அதே சதாத் "சோவியத் யூனியன் அரபு மக்களது ஒற்றுமையை சீர்குலைக்கிறது" என்று கூசாமல் குற்றம் சாட்டுகிறர். தற்சமயம் அவர் கிசிங்கரின் ட்ரவுசர் பாக்கெட்டில் அடங்கியிருக்கிறர். அரபு மக்களது மொத்த நலன்களைக்காட்டிக் கொடுத்துவிட்டு, இஸ்ரேலுடன் அமெரிக்க உத்திரவுக்கு இணங்க, ஒரு மானங்கெட்ட துரோகத்தனமான ஒப்பந்தத்தைச் செய்துள்ளார். இந்த 'டபுள் ஆக்டை'ப் பார்த்தீர்களா?

முந்திய இருவரும் பொதுவான ஏகாதிபத்திய ஆதரவில் இருந்தவர்கள். தற்சமயம ஏகாதிபத்தியஎதிர்ப்பைவெளிப்படுத்துகின்றனர். இவரோ, முன்னர் ஏகாதிபத்திய எதிர்ப்பைக் காட்டியவர்; தற்சமயம ஏகாதிபத்திய ஆதரவு, சோவியத் எதிர்ப்பாளராகியுள்ளார்.

நேரத்துக்கும், நிலைமைகளுக்கும் சக்திகளுக்கும் ஏற்ப வேஷத்தை மாற்றிக் கொள்வார்கள். உலகம் இரண்டு முகாம்களாகப் பிரிந்து எதிரும் புதிருமாக நிற்பது இவர்களது இந்த டபுள்—வேஷ விளையாட்டுகளுக்கு இடமளிக்கிறது. உலகத்தில் நிலவும் பலாபலத்தில்—ஏகாதிபத்திய உலகத்துக்கும், சோஷலிச உலகத்துக்கும் உள்ள பலாபல நிலைகளில் — பெருத்த மாறுதல் ஏற்படும் வரை, இந்த "டபுள் ஆக்ட்"டும் சாத்தியப்படும்.

## ஏகாதிபத்ய எதிர்ப்பு சக்திகள் உண்மையான முன்னேற்றம் காண வழி என்ன?

ஆனல் இந்த டபுள் ஆக்ட் காரர்களில் மிகமிகப்பெரும்பாலோர் தங்கள் தங்கள் உள்நாட்டு விவகாரங்களில் பயங்கரமான ஜனநாயக விரோதிகள், மக்களது எதிரிகள் என்ற பேருண்மையை ஒரு வினாடியும் மறந்துவிடலாகாது. அந்தந்த நாட்டு மக்களது ஜனநாயக இயக்கம் வலுப்பெற்று — உழைப்பாளிகளின் தலைமை உறுதிப்பட்டு — வளர்வதே அங்குள்ள ஏகாதிபத்திய எதிர்ப்பு சக்திகள் உண்மையானமுன்னேற்றம் காணும் வழி. மேல்தட்டு வர்க்கங்களின் "டபுள் ஆக்ட்" சாகசங்களைக் கண்டு ஏமாறாமல் தொழிலாளி வர்க்கமும் அதன் கட்சியும் மக்கள் ஜனநாயகப் புரட்சியை நோக்கி மக்களை அழைத்துச் செல்லும் பணியை மேற்கொண்டாக வேண்டும்.

# உழவனுக்கு நிலம் கொடுக்கும் கொள்கைக்கு ★ தமிழகத்தில் மூடுவிழா ★

அண்மையில் செங்கை மாவட்டத்தில் உள்ள முரவாக்கம் கிராமத்தில், அரசுப் பண்ணைக்கழகத்தின் முதல் பண்ணையை தமிழக முதலமைச்சர் திரு மு. கருணாநிதி துவக்கி வைத்துள்ளார்.

"அரசுப்பண்ணைகளின் வளர்ச்சிதான், நம்முடைய மூலக்குறிக்கோளான எல்லாமே அரசுப் பண்ணைகள் வசம்; விவசாயத் தொழிலாளர்கள் அனைவரும் அரசின் வசம் என்ற கொள்கைக்கு வழிவகுக்க முடியும்" என்ற அறிவிப்போடு, இந்தப் பண்ணையை அவர் துவக்கிவைத்துள்ளார்.

மாநிலத்தில் தரிசாகக் கிடக்கும் நிலங்களையெல்லாம் இந்தஅரசுப்பண்ணைக் கழகம் ஏற்கும்; செங்கற்பட்டு, தென்னாற்காடு, தஞ்சை, புதுக்கோட்டை, திருச்சி, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய 7 மாவட்டங்களில் மட்டும் சுமார் 60 ஆயிரம் ஏக்கர் நிலம் இந்தப்பண்ணையின் கீழ் விவசாயத்துக்குக் கொண்டு வரப்படும்; இதில் கோவில் நிலங்களும் அடங்கும்—என்றும் உதாரணமாக தருமபுரம் ஆதீனம் திருவாரூர் தியாகராஜ சுவாமிகள் ஆகிய கோவில் நிலங்களும் சுமார் 300 ஏக்கர் நிலங்களை இந்த அரசுப் பண்ணைக்கழகம் குத்தகைக்கு ஏற்று சாகுபடியைத் துவக்கி இருக்கிறது-என்றும் முதலமைச்சர் பேசியுள்ளதாக செய்திகள் பத்திரிகைகளில் வந்துள்ளன.

## புரியாத புதிர்

இனிமேல் அரசுக்குச் சொந்தமான நிலங்களை நிலமற்ற கிராமப்புற ஏழைகளுக்கு வழங்கப் போவதில்லை என்று அரசு முடிவு செய்துவிட்டது என்று மாநில அரசின் அமைச்சர் சில மாதங்களுக்கு முன்பு அறிவித்திருந்ததை· முதலமைச்சர் முரவாக்கத்தில் பேசியது உறுதிப்படுத்திவிட்டது.

'உழுபவனுக்குத்தான் நிலம்' என்பதை தேசிய விடுதலை இயக்கம் ஏற்றதும்,

"உழத்தெரிந்தவன் கையில்தான் நிலம் இருக்க வேண்டும்' என்றும் காந்தியார் கூறியதும்—பூமிதான இயக்கத்தை விநோபாஜி துவக்கியதும்,

நிலச்சீர்திருத்த சட்டங்களை காங்கிரஸ் அரசும, திமுக அரசும் கொண்டு வந்ததும், எதைக் காட்டுகின்றன?

நிலம் உழுபவனுக்குச் சொந்தமாக்கப்பட வேண்டும் என்ற உண்மையை மறப்பதற்கு எந்த வகையிலும் நியாயமில்லை என்ற காரணத்தால்தானே இவ்வளவும நடந்துவந்துள்ளது. இதற்காக கடந்த 30ஆண்டு காலமாக — பாரத நாட்டில் குறிப்பாக தமிழ்நாட்டில் கிராமப்புற விவசாயிகளும் விவசாயத் தொழிலாளர்களும் அனுபவித்திருக்கும் கொடுமைகள் — கொழுத்திருக்கும் விலைகள் கொஞ்ச நஞ்சமல்ல.

தமிழ் நாட்டில்1960 முதல் 1975 வரை —ஏறத்தாழ 16 ஆண்டுகளில்—

காங்கிரஸ், திமுக ஆகிய இரு கட்சிகளின் ஆட்சிகளிலுமாக குடும்பத்துக்கு 15 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று வரம்பு கட்டி—கரும்புப்பண்ணை, பால் பண்ணை, மேய்ச்சல் நிலம் விதிவிலக்குகள் எல்லாம் ரத்துச் செய்த பிறகு—இதுவரை உபரியாகக் கிடைத்திருப்பதாக அரசு குறிப்பு கூறும் விவரம் 1லட்சத்து 1120 ஏக்கர்கள். இதில் அரசு இதுவரை எடுத்திருப்பது 78 ஆயிரத்து 956 ஏக்கர். அரசு கணக்குப்படி 16 வருடங்கள் ஆகியும் 22ஆயிரத்து 164 ஏக்கர் உபரிநிலம் அரசால் இன்னும் எடுக்கப்படாமல் உள்ளது — நிலப்பிரபுக்களிடமே இருந்து வருகிறது. அரசு எடுத்துக் கொண்டுள்ள 78ஆயிரத்து 956 ஏக்கரில் இதுவரைவிநியோகிக்கப்பட்டிருப்பது 5 ஆயிரத்து536ஏக்கர். மீதியுள்ள 20 ஆயிரத்து 420 ஏக்கர் அரசு வசம் உள்ளதா? இதன் வருமானம அரசுக்கு வருகிறதா?—என்ற விபரங்கள் புரியாத புதிராகவே உள்ளன.

## மீதி 40 சதம் எடுக்க எவ்வளவு ஆண்டாகுமோ?

உண்மைநிலை என்ன? அரசு எடுத்துக் கொண்டுள்ள நிலங்கள்கூட, விநியோகிக்கப்பட்ட நிலம்போக மீதியுள்ளதும் இனனும்நிலப் பிரபுக்கள் வசமேதான்இருக்கிறது. அப்படியானல் உபரி நிலம் ஒரு லட்சத்து 1120 ஏக்கரில்விநியோகிக்கப்பட்ட 58 536 ஏக்கர் போக அரசால் எடுக்கப்பட்ட நிலத்தில் 20,420 ஏக்கரும், இன்னும் எடுக்கப்படாத நிலம் 22,164 ஏக்கரும் ஆக 42584 ஏக்கர்கள் இன்னமும் கிடைக்கப் படவில்லை. ஆக இதுவரை கிடைத்திருப்பது 60சதவீதம் தான். மீதி 40சதவீதம நிலச் சொந்தக்காரர்களிடம் தான் இருக்கிறது. அறிவிக்கப்பட்ட60சதவீதம்நிலம் எடுக்க சுமார் 16 ஆண்டுகள் ஆகி இருக்கின்றன. மீதி 40 சதவீதம்வரையுள்ள நிலங்களை எடுக்க இன்னும் எத்தனை ஆண்டுகள் ஆகுமோ, தெரியாது.

விநியோகிக்கப்பட்டிருக்கும் நிலத்தினல் சுமார் 35 ஆயிரம் பேர் பலன் அடைந்திருக்கிறர்கள் என்று கூறப்படுகிறது நிலம் பெற்றிருப்பவர்கள் பூராவும் உபரி நிலம் பெறத்தகுதிஉள்ளவர்கள்தானா? ஏற்கனவே நிலம் இருந்து மீண்டும் இந்த உபரிநிலததையும்பெற்றிருக்கிறர்களா? என்பது தனியே பரிசீலிக்கப்பட வேண்டியவை. காரணம், நில விநியோகத்தில அநேக தவறுகள் நடந்திருப்பதற்கான தகவல்களும் இருக்கின்றன.

## கரும்பு நிலம்

கரும்புப் பண்ணைக்கு இருந்த விதிவிலக்கைரத்துச் செய்ததினல் வடபாதிமங்கலம் சர்க்கரை ஆலைக்குச் சொந்தமாக இருந்த சுமார் 7 ஆயிரம் ஏக்கர்நிலம் அரசு வசமாகியிருக்கிறது. இதில், உபரி நிலத்தில்தனக்கு நிலம் கிடைக்கும் என்று ஏங்கிக் கொண்டிருந்த ஏழை உழவனுக்கு ஒரு ஏக்கர் நிலம கூட கிடைக்கவில்லை. காரணம்......?

> 9—9—75-ந் தேதி தீக்கதிர் வார மலரில் "உணவு உற்பத்தி கூடுகிறது. விவசாயத் தொழிலாளர் குடும்பம் வாடுகிறது' என்ற தலைப்பில் வெளிவந்த கட்டுரையில் தமிழ்நாடு முழுவதும் உள்ள விவசாயத் தொழிலாளர்களது கூலி நிலைமைபற்றியும் குறைந்த பட்ச கூலிச் சட்டம் அமுலாகும் தஞ்சை மாவட்டத்தில் அச்சட்டம் நிலப்பிரபுக்களால் தில்லுமுல்லு செய்யப்படுவது பற்றியும வெளியிட்டிருந்தோம. அதன் தொடர்ச்சியாக இந்தியாவிலேயே மற்ற மாநிலங்களைக் காட்டிலும நிலச்சீர்திருத்தம் சிறப்பாக நடைபெற்ற மாநிலம் என காங்கிரஸ் கட்சியின் அகில இந்தியக் கமிட்டியால் சர்டிபிகேட் தரப்பட்ட தமிழ் நாட்டில் நிலச்சீர்திருத்தம் எப்படிநடந்துள்ளது என்பது இக்கட்டுரையில்வரையப்பட்டுள்ளது

கரும்பாலை நிலம் பூராவும் 'கரும்பாலைப் பண்ணை நில வாரியத்'திடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. இந்த கிராமங்களில் உள்ள விவசாயத் தொழிலாளி முதலில் வடபாதிமங்கலம் முதலியாரிடம் தினக்கூலியாக வேலை செய்தான். இன்று கரும்பாலை பண்ணை நில வாரியத்திடம் தினக்கூலியாக வேலை செய்கிறன் கரும்பாலை நிலத்துக்கு விதிவிலக்கு இருந்தாலும் அது ரத்துச் செய்யப்பட்டாலும. ஏழைக் கூலிக்காரர்களையும் பொருத்தவரை-- அவர்களது கதை 'பழைய கருப்பனே கருப்பன், மண்சட்டியே சட்டி' என்பதுதான்.

பொன்னி (காவேரி) நதிப் பாசனத்தில் மட்டும் சுமார் 30 இலட்சம் ஏக்கர்களும், ஏனைய நதிகளின் பாசனத்தில் சுமார் 30 இலட்சம் ஏக்கர்களும் உட்பட நஞ்சையும்புஞ்சையுமாகதமிழகத்தில்சாகுபடிக்கு ஏற்ற மொத்த நிலம் சுமார் 150 லட்சம ஏக்கர். இதில் கடந்த 16 ஆண்டுகளாக கொண்டுவரப்பட்டுள்ள பல் வேறுசட்டங்களால் கிடைத்துள்ள உபரிநிலம் ஒருஇலட்சம் ஏக்கர்தானும். இதுதான் உச்சவரம்புச் சட்டத்தினல் தமிழகத்தில் கிடைத்திருக்கும் பலனாகும்.

ஆளும் காங்கிரஸ் கட்சியின் 20 அம்சப் பொருளாதாரத் திட்டங்களை நிறைவேற்ற, கடந்த பல ஆண்டுகளாக நிலஉச்சவரம்புச்சட்டங்களை அமுலாக்கியது பற்றி நாடு பூராவும் பரிசீலனை செய்து ஓர் ஆய்வு அறிக்கையையும் வெளியிட்டிருக்கிறர்கள். அதில், "நிலவரம்புச் சட்டங்களை அமுல் செய்வதில் தமிழ் நாடு மிகவும் முன்னேறி இருக்கிறது" என்று கூறியிருக்கிறர்கள். இது எதைக் காட்டுகிறது? நிலவரம்புச் சட்ட அமுலில் தமிழ்நாட்டைவிட மற்றைய மாநிலங்கள் மிகவும மோசமாக உள்ளன என்பதைத்தானே. தமிழ்நாடு பரவாயில்லை என்று ஆளும் காங்கிரஸ் கமிட்டி ஆய்வு அறிக்கையே குறிப்பிடுகிறது என்றல் மற்றைய மாநிலங்கள் இன்னும் எவ்வளவு மோசமாக இருக்கும் என்பதைப் புரிந்துகொள்ளலாம்.

## அரசுப் பண்ணை

இந்த நிலையில்தான்—கிராமப்புற மக்களின் நிலப் பசி தீர்க்கப்படாமல் அது மேலும் தீவிரமாகி வரும நேரத்தில்தான்—7 மாவட்டங்களில் மட்டுமே 60 ஆயிரம் ஏக்கர் நிலங்களை அரசுப் பண்ணையின் கீழ் கொண்டு வரப்போவதாகக கூறுகிறர்கள். இதில், தரிசாகக் கிடக்கும் நிலங்களைத்தான் அரசு எடுக்கிறது என்ற பொருள் பட—அரசுக்குச் சொந்தமான தரிசு நிலங்களையும் தரிசாகக் கிடக்கும் ஆலய நிலங்களையும் தான் அரசுப்பண்ணை ஏற்பதாக—முதலமைச்சர் அறிவித்திருக்கிறர்.

தரிசாகக் கிடக்கும் நிலத்தைச் சீர்படுத்த—செப்பனிட, காட்டை கழனியாக மாற்ற, வீணாகக் கிடக்கும் நிலத்தை விளைநிலமாக்க, நிலத்தடி நீரை நிலத்தின் மேல் கொண்டுவர ஏழைக் கூலிக்காரர்களால்இயலாது; அவர்களால் சாத்தியமில்லை. எனவேதான்நாட்டின் நலன் கருதி அரசு இந்தப் பெரும் பொறுப்பை ஏற்கிறதுஎன்று தனககே உரித்தான நாவன்மையைக் கொண்டு நாட்டு மக்களை நம்ப வைக்கும் பெரும் முயற்சியில் தமிழக முதலமைச்சர் ஈடுபட்டிருக்கிறர்.

## உண்மை இதுதானு?

தரிசாக கிடந்த ஆலய நிலங்கள் 300 ஏக்கரை அரசுப்பண்ணை ஏற்றுள்ளதாக கூறியுள்ளார். திருவாரூர் தியாகராஜ சுவாமி கோவிலுக்குச் சொந்தமான நிலம் 200ஏககர்கள். தியாகராஜபுரம் என்ற கிராமத்தில் இருப்பது. தரிசாககிடந்துதான அரசு ஏற்றிருக்கிறதா? சென்ற ஆண்டு வரையில் அதில் சாகுபடி நடக்கவில்லையா? சாகுபடி நடந்து கொண்டுதானே இருந்தது. ஆலயநிர்வாகம் தனது சொந்த பண்ணை வைத்துதானே நடத்தி வந்தது சென்ற ஆண்டு தியாகராஜபுரத்தில் இருக்கும் 200 ஏக்கர்களையும் ஆலய நிர்வாகம் தனது சொந்த பண்ணையில் வைத்திருப்பது சட்ட விரோதமானது.

"அறக்கட்டளை நிலச் சட்டங்களின்படி" 20 ஏக்கர் தான் சொந்தப்பண்ணை வைக்க முடியும. மீதியுள்ள 180 ஏக்கர்களையும் அவ்வூரிலுள்ள நிலமற்ற ஏழைகளுக்குகுத்தகைசாகுபடிக்குதான் கொடுக்க வேண்டும் என்று அவ்வூர் ஏழைகூலிக்காரர்கள் கோரிய போது சொத்து ஜாமீன்கொடுகக வேண்டும், முன்பணம்கட்ட வேண்டும், அப்படி இருந்தாலும் நாங்கள் ஏலம விடுவோம் யார் அதிகம் கேட்கிறர்களோ அவர்களுக்குத்தான் கொடுப்போம் என்ற நிபந்தனைகளைக் கூறி சாகுபடிக்கு கொடுக்க மறுத்துவிட்டது— ஆலய நிர்வாகம்; தானே சொந்த பண்ணைச் சாகுபடியை நடத்தியது.

இந்த ஆண்டு சாகுபடி துவங்குவதற்கு முன்னே, ஏழை விவசாயத் தொழிலாளர்களுக்கும் ஆலய நிர்வாகத்திற்குமிடையே பேச்சு வார்த்தை நடந்தது. இந்த ஆண்டு எப்படியும குத்தகைக்கு நிலம் கொடுக்க வேண்டும என்றும் ஆலய நிர்வாகம் நிலத்தை ஏலம் விடக் கூடாது என்றும்— முன்பணமும் சொத்து ஜாமீனும் தருவதாகவும விவசாயிகள் கூறினர். அதை ஆலய நிர்வாகமும் ஏற்றுக் கொள்வதாகவும் மேலதிகாரிகளைக கலந்து இறுதியாக முடிவெடுப்பதுஎனறும பேசி முடிவு எடுகக்பட்டிருந்தது. ஆனல்,திடீரென்று அரசுப் பண்ணை வசம் நிலத்தைக் கொடுததுவிட்டதாகவும தங்களிடம நிலம் இல்லை என்றும் நிர்வாகம் கூறிவிட்டதுஇப்போது அரசுபண்ணை நடககிறது. உண்மை இப்படி இருகக, தரிசாகக்கிடந்த ஆலய நிலததை அரசுப் பண்ணை குத்தகைக்கு எடுத்திருப்பதாக அரசு கூறுவது எதைக்காட்டுகிறது? சட்டத்தினுல் கிடைககும் உபரி நிலங்களைக்கூட நிலமற்ற ஏழைகளுக்கு சொநதமாக மட்டுமல்ல குத்தகைக்கும் கூடகிடைக்கப் போவதில்லை; அதே போல் அரசுக்கு சொந்தமான நிலங்களும் ஏழைகளுக்கு கிடைக்கப் போவதில்லை என்பதைத் தானே காட்டுகிறது?

## வேடிக்கையான தத்துவ விளக்கம்

'யாரோ சிலர் வாயளவில் சொல்லிக் கொண்டிருப்பதை செயல்வடிவமாக்கி பொதுஉடைமைப் பூங்காவை தமிழகத்தில் உண்டாக்கும் நடவடிக்கை' என்றும், "இதுதான்பொதுஉடைமை தததுவத்தின் செயல் வடிவம" என்று விளக்கப்படுகிறது,

இன்று பொதுஉடைமைத் தத்துவததை மக்களிடமிருந்து மறைக்க முடியாது. இது "கதிரவனை முறத்தால் மறைப்பதற்கு ஒப்பாகும்" என்ற நிலை ஏற்பட்டுள்ளது. எனவே.—இன்று அனைவரும் "மாரீசன் மான வேடம் தரித்த" கதையைப் போல—தாங்கள் கூறுவதுதான் பொதுஉடைமைத் தததுவத்தின் விளக்கம் என்று—தங்களுக்கு இருக்கும் வாய்ப்பு, வசதி, பிரசசார பலம ஆகிய அனைத்தையும் உபயோகப் படுத்தி மக்களை நம்ப வைகக காணகடூரமாக முயற்சித்து வருகின்றனர். அதனமூலம, பொதுஉடைமைத் தததுவத்தின் உண்மை நிலையறியா மக்களை எத்தனைகாலத்துக்கு ஏமாற்றுவது சாத்தியமோ அதைச் செய்து கொண்டிருக்கிறர்கள்.

உலகில் எந்தவொரு சோசலிச நாட்டிலாவது நிலங்கள் பூராவும் அரசுப் பண்ணைவசம, விவசாயத் தொழிலாளர்கள் பூராவும் பண்ணை வசம் என்று சொல்லி, நிலப்பிரச்னை தீர்வு காணப்பட்டுள்ளதா? சோவியத் யூனியனிலோ, மக்கள் சீனத்திலோ, வீரவியட்னமிலோ அல்லது இதர சோஷலிச நாடுகளிலோ இதற்கு ஓர் உதாரணத்தைபாவது கூற முடியுமா?

உழும்நிலங்களைஎடுத்து அரசுப பண்ணை அமைதது்க்கொண்டு— அப்பண்ணையின நிர்வாகப பொறுப்புகள பூராவையும் அதிகார வர்க்கத்திடம ஒப்படைததுவிட்டு — அந்த ஊரில் உள்ளஏழை கூலிக்காரர்களை அந்த அதிகார வர்க்கத்தின் கீழ் கூலிககாரர்களாக வைத்துக் கொண்டு—இதுதான் "பொது உடைமைத தத்துவத்தின செயல் வடிவம" என்றல்—இது கேட்பதற்கு வேடிக்கையாக இல்லையா?

## கூறுவது என்ன?

தொழிலாளி வர்க்கத்தின் தலைமையில்புரட்சிநடந்து தொழிலாளிவர்க்கம் அரசு அதிகாரத்தை ஏற்றவுடன் (புரட்சியில் தனக்கு உற்ற துணைவனக இருந்த—இதுவரை ஈவிரக்கமற்ற சுரண்டலுக்கு ஆளாக்கப்பட்டிருந்த விவசாயி வர்க்கத்துக்காக) உழவனுக்கு நிலத்தை சொந்தமாக்குதொழில்கள்பூராவும் நாட்டுடைமையாக்கு )இவ் (இங்கே நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது—அரசுடைமையாக்கு என்பதல்ல) என்பதுதான் பொது உடைமை தததுவம். உலகில் மூன்றில ஒருபகுதி மக்கள் அத்தத்துவத்திற்கு செயல் வடிவம கொடுத்ததும் இப்படித்தான்.

உழுபவனுக்கு நிலத்தை சொந்தமாக்கி — அதை அவர்கள் இஷ்டப்பூர்வமாக கூட்டுப் பண்ணையாக்கி — அந்தப்பண்ணையின் நிர்வாகப் பொறுப்புகள் பூராவையும அவர்களே நிர்வகிக்கச் செய்து (ஐ ஏ எஸ் அதிகாரிகளைக் கொண்டல்ல)-அவர்களது [illegible]யும், நாட்டின் நலனை [illegible]களை உணர [illegible]ற்கான உத [illegible] அரசே [illegible]யது—[illegible]னியட[illegible]ங்கி—அவர்களது [illegible] பை குறைந்த உற்பத்[illegible]தி கப்படுதத இயந்திர[illegible] விகள் செயது — அ[illegible]த உழும் நிலத்தில்

(4-ம் பக்கம் பார்க்க)

# ஜனநாயக உரிமைகளின் பதாகையை உயர்த்திப் பிடித்து முன்னேறுங்கள்

## தோழர் ஸ்டாலின் அறைகூவல்

**"பூர்ஷ்வாக்கள், தங்களது பூர்ஷ்வா ஜனநாயக உரிமைகளைக்கூட தூக்கியெறிந்து விட்டார்கள். இந்தக் கொடியைத் தூக்கிப் பிடித்து முன்னேக்கிச்செல்ல வேண்டியவர்கள் கம்யூனிஸ்ட்களும் ஜனநாயகவாதிகளும்தான். பெரும்பாலான மக்களை உங்களைச் சுற்றிலும் திரட்ட வேண்டுமானல், இந்தக் கொடியை உயர்த்தி நிற்க வேண்டியவர்கள் நீங்களே உங்களைத் தவிர இக்கொடியை ஏந்திப் பிடிக்க வேறு யாருமில்லை" — என்று 1952-ம் ஆண்டில் நடந்த சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் 19-வது காங்கிரஸில் தோழர் ஜே. வி. ஸ்டாலின் அறிவுறுத்தினர்.**

தோழர் ஸ்டாலின் இதுபற்றி விளக்கிக் கூறுகையில் குறிப்பிட்டதாவது!—

''1917-ல் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியானது ஆட்சி அதிகாரத்தை மேற்கொண்டபிறகு— அதற்குப்பின், முதலாளிகளுடைய எதிர்ப்பையும் நிலப்பிரபுக்களுடைய கொடுமையையும் ஒழித்துக்கட்ட நமது கட்சி பலனுள்ள நடவடிக்கைகளை மேற்கொண்ட பிறகு— நமது சகோதரக் கட்சிகளெல்லாம் நமது கட்சியின் தைரியத்தையும், வெற்றியையும் வெகுவாகப் பாராட்டிப் புகழ்ந்தன. அந்த மகிழ்ச்சியில் ''அகில உலகப் புரட்சிகர இயக்கத்துக்கும் தொழிலாளர் இயக்கத்துக்கும் இது ஒரு அதிரடிப்படை'' என்று நமது கட்சிக்குப் பெயரிட்டுப் புகழ்ந்தன.

### அதிரடிப்படை என்பதை நிரூபித்துக் காட்டினேம்

இதன் மூலம், அக்கட்சிகள் தத்தம் நம்பிக்கையைத் தெரிவித்துள்ளன. முதலாளித்துவ நுகத்தடியின் கீழ் அல்லல்பட்டுக் கொண்டிருக்கும் மக்களுடைய நிலைமையில் ஓர் சாதகமான நிலைமையை இந்த ''அதிரடிப் படை''யின் வெற்றிகள் ஏற்படுத்திக் கொடுக்கும் என்று சகோதரக் கட்சிகள் நம்பிக்கை தெரிவித்துள்ளன என்று அருத்தமாகும்.

ஆம். இந்த நம்பிக்கையை நமது கட்சி நிறைவேற்றியுள்ளது என்றே நான் கருதுகிறேன். சிறப்பாக, இரண்டாவது உலக யுத்தத்தின் போது, ஜெர்மானிய, ஜப்பானிய பாசிஸக் கொடுங்கோன்மையை தகர்த்துத் தவிடுபொடியாக்கியதின் மூலம், சோவியத் யூனியனுனது, ஐரோப்பிய மக்களையும், ஆசிய மக்களையும் பாசிஸ்ட் அடிமைத்தனத்திலிருந்து விடுவித்தது. இதன் மூலம் நமது மின்னல் படையானது 'சகோதரக் கட்சிகளின் நம்பிக்கையை நிறைவேற்றி வைத்தது.

### அன்று நாம் ஒரே படை இன்று பல படைகள்

போற்றுதலுக்குரிய இந்தப் புரட்சிகரப் பணியை நிறைவேற்றிட, இயல்பாகவே, அன்று நமது 'அதிரடிப் படை, ஒன்றுதான் இருந்தது. அன்று முன்னணிப் படையின் வேலையை அது ஒன்றுதான் தன்னந்தனியாக நிறைவேற்ற வேண்டியிருந்தது.

இன்றைய நிலைமை என்ன? நிலைமை எவ்வளவோ மாறிவிட்டது. 'மக்கள் ஜனநாயக அரசுகள்' என்ற வடிவத்தில், சீன, கொரியா முதல் செக்கோஸ்லோவேகியா, ஹங்கேரி வரை புதிய ''அதிரடிப்படைகள்'' தோன்றியுள்ளன. அதனால், போராடுவதற்கு நமது கட்சிக்கு இப்பொழுது சுலபமாகி விட்டது. இப்பொழுது வேலையானது முன்னை விட சந்தோஷமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

### அன்று நமக்கிருந்த கடுமை இன்று இவர்களுக்கு இருக்காது

ஆட்சி அதிகாரத்துக்கு இன்னும் வராமல் இருக்கின்றவையும், பூர்ஷ்வாக்களின் கொடூரமான சட்டங்களின் காலடியில் கிடந்து பணியாற்றிக் கொண்டிருப்பவையுமான அந்த கம்யூனிஸ்ட் கட்சிகளுக்கும், ஜனநாயகக் கட்சிகளுக்கும், தொழிலாளர் கட்சிகளுக்கும், விவசாயிகள் கட்சிகளுக்கும் நாம் தனிக்கவனம் செலுத்த வேண்டியது அவசியமாகும்.

அவர்களைப் பொறுத்தவரையில், இயல்பாகவே, அவர்கள் ஆற்றவேண்டிய பணி கடுமையான பணிதான்.

ஆனல், ருஷ்யக் கம்யூனிஸ்டுகளாகிய நமக்கு ஜார் ஆட்சி நடந்த காலத்தில் ஏற்பட்டிருந்த கடுமையான நிலை போல—அதாவது முன்னேற்றப் பாதையில் சின்னஞ்சிறு அசைவு ஏற்பட்டாலும், அது ஒரு கடுமையான குற்றமாகக் கருதப்பட்டதுபோன்ற அவ்வளவு கடுமையான நிலைமை, இன்று சகோதரக் கட்சிகளுக்கு ஏற்பட்டிருக்கவில்லை.

ஆயினும், ருஷ்யக் கம்யூனிஸ்டுகள் ஈடு கொடுத்து நின்ருர்கள்: எதிர்ப்பட்ட இன்னல்களைக் கண்டு, உள்ளம் ஒடியாமல், ஊக்கமுடன் போராடி வெற்றிவாகைசூடினர்கள். அதே போன்றே நமது சகோதரக் கட்சிகளும் ஊக்கம் குன்ருமல் வெற்றி பெறுவார்கள்.

### அன்று இருந்த கஷ்டம் இன்று இல்லாதது ஏன்?

ஜார் காலத்தில் ருஷ்யக் கம்யூனிஸ்டுகளுக்கு இருந்தது போன்ற அவ்வளவு கஷ்டங்கள், இன்று சகோதரக் கட்சிகளுக்கு இல்லாதது ஏன்?



முதலாவது காரணம்: இன்று சோவியத் யூனியன் இருக்கிறது; மக்கள் ஜனநாயகங்களும் இருக்கின்றன. **இந்த நாடுகள் நடத்திய போராட்டங்களும் சாதனைகளும் சகோதரக் கட்சிகளின் கண் முன்னல் உதாரணங்களாகப் பார்ப்பதற்கு உள்ளன.**

அதன் விளைவாக, இந்த நாடுகள் செய்த தவறுகளிலிருந்தும் அடைந்த சாதனைகளிலிருந்தும், படிப்பினைகளைக் கற்றுக்கொள்ளக் கூடிய நிலைமையில் சகோதரக் கட்சிகள் உள்ளன. இதன் மூலம் இக்கட்சிகள் தங்களது சொந்த வேலையைச் சுலபமாக்கிக் கொள்ளமுடியும்.

இரண்டாவது காரணம் என்னவென்ருல், மக்களின் விமோசன இயக்கத்துக்கு முக்கிய எதிரிகளான பூர்ஷ்வாக்கள், முன்போல் இல்லை. தனக்குத்தானே வேறு விதமாக ஆகியிருக்கின்றனர். சாராம்சத்தில் மாறியுள்ளனர்.

**பூர்ஷ்வாக்கள் முன்னிலும் அதிகமாக பிற்போக்காகிவிட்டார்கள்; மக்களுடன் தங்களுக்குள்ள பிணைப்புகளை இழந்துவிட்டார்கள்; அதன் மூலம் அவர்களே பலவீனப்பட்டுக் கிடக்கிருர்கள்.**

இயல்பாகவேஇந்தசந்தர்ப்பசூழ்நிலைகளும்கூடபுரட்சிகர கட்சிகளின் வேலைகளையும் ஜனநாயக கட்சிகளின் வேலைகளையும் இலகுவாக்கியிகுக்கும்.

### ஜனநாயகக் கொடியை வீசியெறிந்து விட்டார்கள்

முன்பெல்லாம், பூர்ஷ்வாக்களால் மிதவாதிகளாக இருக்க முடிந்தது. பூர்ஷ்வா ஜனநாயக சுதந்திரங்களை ஏற்றிப் போற்றினர். இதன் மூலம், மக்கள் மத்தியில் செல்வாக்கும் பெற்றனர்.

இப்பொழுதோ, இந்த மிதவாதத்தின் தடம் கூட காணமுடியவில்லை. ''தனி நபர் சுதந்திரம்'' என்று அடிக்கடி கூறுவார்களே, அது அடியோடு போய் விட்டது. தனி நபர் உரிமைகள் என்பதெல்லாம், இப்போது யார் யார் மூலதனம் வைத்திருக்கிருர்களோ, அவர்களுக்கு மாத்திரமே வழங்கப்பட்டிருக்கிறது. இதர எல்லா பிரஜைகளையும், சுரண்டுவதற்காக மாத்திரமே தகுதிபடைத்த மனித மூலப் பொருளாகக் கருதுகிருர்கள்.

மனிதர்களுக்கும், தேசங்களுக்கும் சமஉரிமை என்ற கோட்பாட்டை சேற்றிலே போட்டு அமுக்கி விட்டார்கள். அந்த உரிமையை எடுத்தெறிந்து விட்டு அந்த இடத்தில், சுரண்டும் மைனரிட்டிக்கே முழு உரிமைகள்— சுரண்டப்பட்ட மெஜாரிட்டிக்கு எந்த உரிமையும்இல்லை— என்ற கோட்பாட்டைப் புகுத்தி விட்டார்கள்.

பூர்ஷ்வா ஜனநாயக சுதந்திரங்கள் என்ற பதாகையை வீசி எறிந்து விட்டார்கள்.

### உயர்த்திப் பிடிக்கவேண்டியவர்கள் நீங்களே

கீழே கிடக்கும் இந்தப் பதாகையை உயர்த்திப் பிடிக்க வேண்டியவர்கள் யார்? நான் நினைக்கிறேன். கம்யூனிஸ்டுக்கட்சியின் பிரதிநிதிகளாகிய நீங்கள்தான். ஜனநாயகக் கட்சிகளின் பிரதிநிதிகளாகிய நீங்கள்தான், இந்தக் கொடியை உயர்த்திப்பிடித்து, முன்னே கொண்டுசெல்ல வேண்டியவர்கள் என்று நான் கருதுகிறேன். பெரும்பான்மை மக்களை உங்களைச் சுற்றிலும் திரட்டிவைத்துக் கொள்ளவேண்டுமென்று நீங்கள் விரும்பினல் இந்தக் கொடியைத் தூக்கி முன்னேற வேண்டியவர்கள் நீங்கள் தான். இதை ஏந்திப்பிடிக்க வேறு நாதியே இல்லை''— என்று தோழர் ஸ்டாலின் கூறினர்.

---

அத்தியாயம்-3

# இந்திய சுதந்திரப் போராட்ட வரலாறு

# இந்தியாவைப் பற்றி காரல் மார்க்ஸ்

சரித்திரஇயல்பொருள்முதல்வாதம் என்ற தத்துவத்தை உருவாக்கியவர்களுக்கு, இந்தியாவைப்பற்றியோ ஏனைய ஆசிய நாடுகளைப் பற்றியோ எந்த ஞானமும் கிடையாது. எனவே, இந்தியாவின் வரலாற்றுக்கோ இந்தியாவின் நிகழ்காலப் பிரச்னை சம்பந்தமான கல்விக்கோ, சரித்திர இயல்பொருள் முதல்வாதமானது எந்த முக்கியத்துவமும் பெற்றிருக்கவில்லை என்று வாதிப்பவர்களும் இருக்கிருர்கள் அல்லவா?

இப்படி வாதிப்பவர்களை, "கதை புரியாமல் ஆட்டம் காண்பவர்கள்'' என்றுதான் கூறவேண்டியுள்ளது. ஏனெனில், சரித்திர இயல் பொருள் முதல் வாதத் தத்துவத்தின் ஆசான்களான காரல் மார்க்சும், ஏங்கல்சும் ஐரோப்பாவில் எழுந்துவந்த பூர்ஷ்வா ஜனநாயகப் புரட்சிகள், அவற்றின் ஒரு பகுதியான ஒன்றுபட்ட தொழிலாளர்இயக்கம் ஆகியவற்றின் அடிப்படைப் பார்வையோடு தான் உலகம் முழுவதையும் அவர்கள் உற்று நோக்கினர்கள், அதுமட்டுமின்றி, உலகெங்குமுள்ள சமூக மாற்றங்களுக்கு உதவி புரிய முயற்சித்த ஞானமுள்ள புரட்சிவாதிகளாகத்தான் மார்க்சும் ஏங்கல்சும்இருந்தார்கள். உலகிலுள்ளஎல்லா விஷயங்களைப் பற்றியும் அவர்கள் ஐரோப்பாவிலிருந்து கொண்டே படித்து ஆராய்ச்சி செய்து கொண்டிருந்த போது இந்தியாவைப் பற்றியும் எவ்வளவு உண்மைகளைத் திரட்ட முடியுமோ, அவ்வளவையும் திரட்டினர்கள். இவ்வாறு, இந்தியாவைப்பற்றிய நிகழ்ச்சிப் போக்குகளை, உலக [illegible] த்துவ வளர்ச்சியின் சூழலி[illegible] அவர்கள் முயற்சி[illegible]

### [illegible]சிப்பாய்க் [illegible]கம்''

[illegible]மார்க்சும் ஏங்கல்சும் வெளியிட்[illegible] கருத்துக்கள் முழுமையானதென்றே குற்றமற்றதென்றே எந்த மார்க்ஸீயவாதியும் வாதிடமாட்டார்கள். ஆனல், அந்தக் காலத்தில் ஏனைய எந்த வரலாற்று ஆசிரியரும் செய்ய முடியாத அளவில், இந்திய சமுதாய மாற்றங்களின் கீழ்மட்டத்தில் நுழைந்து சென்று, அவற்றில் அடங்கியுள்ள சாராம்சம் என்னவென்று கண்டுபிடிப்பதற்கு அவர்களால் முடிந்தது. இந்த உண்மையை அவர்களின் நூல்களைப் படிக்கும் எவரும் ஒத்துக் கொள்வார்கள். [குறிப்பாக "இந்தியாவைப் பற்றி காரல்மார்க்ஸ்'' என்ற நூல்.]

1850 ஆம் ஆண்டுகள்தான் (1850—1860) இந்தியாவில் ஆங்கிலேய மேலாதிக்க வரலாற்றின் ''தீர்மானிக்கும் அளவி''லான முக்கியத்துவமுள்ள காலகட்டம், இந்தக் காலத்தில்தான்—மார்க்சும் ஏங்கல்சும் ''நியூயார்க் டெய்லி டிரிபியூன்'' என்ற பத்திரிகையிலும் ஏனைய சில பத்திரிகைகளிலும் இந்தியாவைப் பற்றி பல கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதி வந்த காலத்தில் தான் ''சிப்பாய்க் கலகம்'' என்று ஆங்கிலேயரால் பெயர் சூட்டப்பட்ட சுதந்திர போராட்டம் நடந்தது. இந்தப்போராட்டம் நடக்கும்போது, இதன் துவக்கத்தையும் வளர்ச்சியையும் நாள்தோறும் கவனமாகக் கிரகித்து ஏராளமான கட்டுரைகளை அவர்கள் எழுதினர்கள்.

இந்தக் கட்டுரைகளில் பெரும்பாலானவை மார்க்சால் எழுதப்பட்டவை. ஏனைய பல கட்டுரைகள் ஏங்கல்சினல் எழுதப்பட்டவையாகும். மார்க்ஸ் எழுதிய கட்டுரைகளுக்குகூட ஏங்கல்சின் ஆலோசனைகள் பேருதவியாக இருந்தன. அதுமட்டுமின்றி, ஏனைய பல விஷயங்களைப் போன்றே, இதுபற்றியும் கடிதங்கள் மூலம் இருவரும் கருத்துப் பரிமாற்றம் நடத்திவந்தார்கள். இப்படி சரித்திர இயல் பொருள் முதல்வாதத் தத்துவத்தின் மூலகர்த்தாக்களான இரண்டு நபர்களின் கூட்டு ஆராய்ச்சியின் வாரிசுகள் தான் இந்தக்கட்டுரைகள்.

இந்தக் கட்டுரைகளையெல்லாம் தேடிஎடுத்து, ஒன்றுபடுத்தி ''முதலாவது இந்திய சுதந்திரப் போராட்டம் 1857—59'' என்ற தலைப்பில் ஒரு நூலை மார்க்ஸ்—ஏங்கல்சின் பல்வேறு நூல்களுடன் மாஸ்கோவிலுள்ள அயல் மொழிப் பதிப்பகம் வெளியிட்டுள்ளது. இந்த நூலை ஒரு தடவை மேல்மட்டமாகப் படித்த எந்தவொரு நபரும்கூட இந்தியாவைப் பற்றிஎந்த ஞானமும் இல்லாதவர்கள் சரித்திரஇயல் பொருள்முதல்வாதத்தத்துவத்தை உருவாக்கினர்கள் என்று கூற மாட்டார்கள். அது மட்டுமல்ல. அந்த நியாயத்தைக் கூறி அந்த தத்துவத்தை நிராகரிக்கவும் மாட்டார்கள்.

**இ. எம். எஸ். நம்பூதிரிபாட்**

உலக முதலாளித்துவத்தின் வளர்ச்சியையும், தன்மையையும் நன்ருகப் புரிந்து அதனுடைய எதிர்கால வளர்ச்சியின் வடிவத்தை மதிப்பிடுவதற்கு மார்க்ஸ் பெரு முயற்சி செய்து கொண்டிருந்தார். இந்த ஆராய்ச்சிக்கு அடிப்படையாக இருந்த அந்தக் காலத்தில் மிகவும்வளர்ச்சியடைந்த முதலாளித்துவத்தின் கேந்திரமாக இருந்த இங்கிலாந்தின் முதலாளித்துவ வளர்ச்சி சம்பந்தமான உண்மைகள் ஆகும். இங்கிலாந்திலுள்ள ஆட்சியாளர்கள் சேகரித்த புள்ளி விபரக் கணக்குகள், அவர்கள் தயார் செய்த தகவல்கள் மற்றும்இவைகளை அடிப்படையாக கொண்டு பிரிட்டிஷ் நாடாளுமன்றத்திலும் ஆங்கில பத்திரிகைகளிலும் நடந்த விவாதங்கள் இவைகள்தான். மூலதனம் உட்படஉள்ள எல்லா நூல்களின் வழியாக முதலாளித்துவத்தின்சுய உருவத்தை வெட்ட வெளிச்சத்தில் அம்பலப்படுத்துவதற்கு மார்க்சுக்கு பேருதவி புரிந்தன.

இதோடு, இந்தியாவைப் பற்றி இங்கிலாந்திலுள்ள ஆட்சியாளர்கள் சேகரித்த உண்மைகள், அவற்றை அடிப்படையாகக் கொண்டு உருவான கருத்துக்கள் ஆகியவைதான் காரல்மார்க்சுக்கு தனது சொந்தக் கருத்துக்களை உருவாக்குவதற்கு உதவியாக இருந்தன. ஆனல், உலக முதலாளித்துவத்தின் விஷயத்தில் பொதுவாகவும், இந்தியா சம்பந்தப்பட்ட விஷயத்தில் குறிப்பாகவும் உலகத் தொழிலாளர் இயக்கத்தின் கண்ணோட்டத்தோடு மார்க்ஸ் அணுகுகிருர். ஆதலால்தான் ஆட்சியாளர்களின்அணுகுமுறையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு அணுகுமுறையைக் கடைப்பிடிக்க மார்க்சுக்கு முடிந்தது.

இதற்கு முன்பு கூறியது போன்று இந்தியாவைப் பற்றிய மார்க்சின் மதிப்பீடானது, அதனுடைய எல்லா அம்சங்களையும் ஆய்ந்து பார்க்கும்போது முழுமையானதோ குற்றமற்றதோ அல்ல. கடந்த 120 வருடங்களாக, இந்திய வரலாற்று ஆசிரியர்களும், வெளிநாட்டு வரலாற்று ஆசிரியர்களும் நடத்திய கடுமையான முயற்சிகளின் பயனுகக் கிடைத்த தகவல்கள், இந்தியாவைப் பற்றி மார்க்ஸ் கூறியுள்ள வரலாற்று விளக்கங்களின் முழுமையின்மையை நமக்கு தெளிவுபடுத்துகிறது. ஆனல் மார்க்சின் விளக்கங்களிலுள்ள இந்த முழுமையின்மையையும் கடந்து, தலைநிமிர்ந்து நிற்குமளவிற்கு அற்புதமான நுணுக்கத்தோடு, மார்க்ஸ் இந்தியாவைப் பற்றி பல விளக்கங்கள் தந்துள்ளார். இந்தியாவின் கடந்தகால வரலாறு, அதில் அந்நிய மேலாதிக்கம் ஏற்படுத்திக் கொண்டிருந்த மாற்றங்கள், அவற்றின் பரிணும வளர்ச்சி என்ற நிலையில் எதிர்கால இந்தியாவைப் பற்றிய கணிப்பு—இவைகளையெல்லாம் பரிசீலனை செய்து சரியாக மதிப்பிடவும், தெளிவாகக் கணிக்கவும் அவருக்கு முடிந்தது. ஆனல் இந்த மதிப்பீடுகள் அனைத்தும், அன்று வடிவம் பெருத எதிர்கால இந்தியத் தொழிலாளர் வர்க்கம் அனுஷ்டிக்க வேண்டிய அடிப்படை அணுகுமுறையோடு இணைந்திருந்தது.

முதலாளித்துவ வளர்ச்சிக்கு எடுத்துக் காட்டாக உள்ள எல்லா நாடுகளையும் போன்று, இந்தியாவிலும் பழைய அல்லது முதலாளித்துவத்திற்கு முந்திய சமூக அமைப்பிற்கும், புதிய (முதலாளித்துவ) சமூக அமைப்பிற்கும் இடையே கடுமையான மோதல் நடந்து கொண்டிருந்தது. ஏனைய நாடுகளில் பழைய சமூக அமைப்பிற்கெதிராக, புதிய சமூகத்தினருடன் இணைந்து நின்றதோடு, புதிய சமூகத்தில் மேலாதிக்கம் வகிக்கும் வர்க்கத்திற்கு (பூர்ஷ்வாக்களுக்கு) எதிராக, தொழிலாளர்வர்க்கம் ஒன்றுபட்டு வளருவதற்கு மார்க்ஸ் உதவிகளைச் செய்து கொண்டிருந்தார். அதனல் தான், ''வரலாற்று ரீதியாகப் பார்க்கும்போது பூர்ஷ்வாக்கள் மிகவும் புரட்சிகரமான ஒரு பாத்திரம் வகித்துள்ளார்கள்'' என்று சந்தேகத்திற்கு இடமின்றி ''கம்யூனிஸ்ட் அறிக்கை'' கூறுகிறது.

அதில் மேலும் கூறுவது:

நவீன தொழில்களின் முன் நிற்க முடியாமல் ஏனைய வர்க்கங்கள் அனைத்தும் சோர்வடைந்து இறுதியாக அழிந்து விடுகின்றன. தொழிலாளர் வர்க்கம் தான் அதன் சிறந்த அடிப்படையான விளைபொருள்.''

— தொடரும்

---

### தமிழகத்தில்-மூடுவிழா...

[ 3-ம் பக்கத் தொடர்ச்சி ]

கிடைக்கும் பலன்கள் (உற்பத்தி) பூராவையும் அந்த உழவர்களுக்கு கிடைக்கச் செய்து—பல நூறு ஆண்டுகளாக பாழ்பட்டுப்போயிருக்கும் அவர்களின் வாழ்வை மேம்படுத்தச் செய்வதுதான் பொது உடைமைத் தத்துவத்தின் செயல்வடிவம்,

உச்சவரம்புச் சட்டத்தின் மூலம் கிடைத்த கரும்பாலை உபரி நிலம் —அறக் கட்டளைச் சட்டப்படி, உள்ள நிலங்கள் அரசுக்கு சொந்தமான புறம்போக்கு நிலங்கள் அனைத்தையும் அந்தஅந்தஊரில் உள்ள நிலமற்ற ஏழைகளுக்கு வழங்கி அந்த நிலத்திற்கு அவர்களையே சொந்தக்காரர்களாக்கி—அதை விளைநிலமாகமாற்றத்தக்கஉதவிகளை அவர்களுக்கு செய்து கொடுப்பதுதான்—ஏழை உழவர்களின் வாழ்வில் மறுமலர்ச்சியை ஏற்படுத்த உதவி செய்யும். அதுதான் நீண்ட காலமாக இந்த நாட்டிலுள்ள குறிப்பாக தமிழ் நாட்டிலுள்ள கிராமப்புற ஏழை மக்களின் கோரிக்கையாகும், இதைத் தான் இதுவரை ஆட்சியில் இருந்தவர்களும்—இருப்பவர்களும் ஏற்றுக்கொண்ட கொள்கையாகும்.

அப்படி இருக்க உழவனுக்கு நிலம் —என்பதை மாற்றி உழு நிலம் பூராவும் அரசுப் பண்ணை வசம் என்ருல், உழவனுக்கு நிலமளிக்கும் கொள்கைக்கு மூடுவிழாவா? என்ற கேள்விதான் எழுகிறது. முரவாக்கத்தில் ஒலித்த குரல் இதைத்தானே ஊர்ஜிதப்படுத்துகிறது! இதுகிராமப்புறஏழைகளுக்கு வாழ்வளிக்கும் பாதையல்ல— கூலிக்காரர்களை இடமாற்றும் ஏற்பாடு தானே தவிர வேறல்ல.

எனவே — உண்மையிலேயே கிராமப்புற ஏழைகளுக்கு வாழ்வளிக்க வேண்டுமானல் அவர்கள் கைக்கு நிலம் கிடைக்க வேண்டும். அதற்கு தமிழகஅரசின் செயல் வடிவம் மாறித்தான் ஆகவேண்டும்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ் ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா